# கல்கி

KALKI 31.1.88 ரூ. 2.



மீட்கப்பட்ட கொத்தடிமைகளுக்கு மீண்டும் துயரம்!







## சுவைமிக்கது

சுப்ரீம், மற்ற எண்ணெய்களைப் போலன்றி, உணவின் மணத்தையும் சுவையையும் மிஞ்சும்தன்மை இதற்கு இல்லை. எனவே, உணவின் இயற்கையான சுவையும் மணமும் பாதிக்கப்படாமல் அப்படியே இருக்கின்றன.

## பிசுக்கற்றது

சுப்ரீம், மற்ற எண்ணெய்களுக்கு மாறானது. சிறிதும் பிசுக்கற்றது. பொரித்த அப்பளம் அல்லது பூரியின்மீது எண்ணெயின் சுவடே தெரியாது. மொரமொரப்பும் சுவையும் ஓங்கி நிற்கும்.

## பல முறை பயன்படக்கூடியது

சுப்ரீம், மற்ற எண்ணெய்களைப் போலல்லாமல், எத்தனை முறை சூடாக்கினாலும் இதன் நிறம், மணம், சுவையில் குறிப்பிடத்தக்க மாறுதல் இருக்காது. எனவே இதை மீண்டும் மீண்டும் பயன்படுத்தலாம். ஆனால் மற்ற எண்ணெய்களையோ ஒரு முறை அல்லது புதிய எண்ணெயை சேர்த்துத்தான் உபயோகிக்கவேண்டும். எனவே இது சிறந்தது.




# சுப்ரீம்

### இருமுறை சுத்திகரிக்கப்பட்ட சுத்தமான தாவர எண்ணெய்




சுப்ரீம், இந்த சமையல் எண்ணெய் விரைவில் சூடேறுகிறது. சூட்டை அதிக நேரம் தக்க வைக்கிறது. எனவே எரிபொருள் மிச்சம். இது தெளிவாக இருக்க இரு முறை சுத்திகரிக்கப்படுகிறது. இன்னொரு சிறப்பு: இதிலுள்ள உயர்தர பருத்தி விதைப் பருப்பின் சாறு கொலஸ்ட்ராலைக் குறைக்கிறது. புரதச் சத்தைப் பெருக்குகிறது. எனவே உங்கள் உணவு ஆரோக்கியமானதாகவும் இன்சுவையுடனும் இருக்கிறது.

**சிறந்தவை அனைத்தும் கொண்ட சிக்கன சமையல் எண்ணெய்**

அதிக பட்ச விலை 31-00 (1 கிலோ கிராம்) வரிகள் உட்பட.
அதிக பட்ச விலை 59.00 (2 கிலோகிராம்) வரிகள் உட்பட.

எஸ்.எஸ்.டி ஆயில் மில்ஸ் கம்பெனி (பி) லிட்.,
வில்லேஜ் ரோடு, ஐயப்பன்தாங்கல், சென்னை-56.

Artig/SSD/218/87 TAM/A



● அந்தக் கறுப்புக் கண்ணாடிக்குப் பின்னும் என்ன மந்திர மாயமோ? பதினாறு விக்கெட்! வித்தியாச முக்குத் சுகர்க்களிக்கும் பாரா!' ஆ

# ஹீரோ ஹிர்வானி

மீனம்பாக்கம் விமான நிலையம். இந்திய கிரிக்கெட் அணியினர் டெஸ்ட் ஆட விமானத்தில் வந்திறங்கினர். காப்டன் ரவி சாஸ்திரியையும் ஆட்டக்காரர்களையும் தமிழக கிரிக்கெட் சங்க நிர்வாகிகள் மாலையிட்டு வரவேற்றனர். அப்பொழுது காப்டன் ரவி சாஸ்திரி, ''இளைஞர் நரேந்திர ஹிர்வானி எங்கேயிருக்கிறார், அவரை அழைத்து வர வேணும்!'' என்றார். தமிழக கிரிக்கெட் சங்க நிர்வாகிகளில் ஒருவரான சோமு அங்குமிங்கும் அலைபாய்ந்து ஹிர்வானியைத் தேடினார். அதற்குள் மற்ற கிரிக்கெட் ஆட்டக்காரர்களைக் கார்களில் ஏற்றிக் கன்னிமாரா ஹோட்டலுக்கு அனுப்பிவிட்டனர். குள்ளமான உருவம், கண்களில் வண்ணமிட்ட கண்ணாடியுடன் ஓர் ஓரத்தில் சங்கோஜியாக நின்று கொண்டிருந்தார். அவரிடம் தயங்கியபடியே நெருங்கிய சோமு, ''நீங்கள் நரேந்திர ஹிர்வானி தானே?'' என்று நிச்சயப்படுத்தி அவரைக் கடைசிக் காரில் ஏற்றி அழைத்து வந்தார்! இப்படி ஒதுங்கி நின்ற மனிதர்தான் சென்னை டெஸ்டிலே மேற்கிந்தியத் தீவு குழுவினரைச் சுருட்டியெடுத்து வெற்றிக்கு வழிவகுத்தவர்.

கன்னிமாரா ஹோட்டலில் இந்தியாவுக்கு வெற்றி தேடித் தந்த இந்த லெக் ஸ்பின்னர் நரேந்திர ஹிர்வானிதான் வெற்றி 'கேக்' வெட்டி அனைத்து ஆட்டக்காரர்களுக்கும் வழங்கினார்.

''நான் ஓர் அன்னியன் போல் சென்னைக்கு வந்திறங்கினேன்! முதல் தடவை டெஸ்ட் பிரவேசம் எனக்கு! பதினாறு விக்கெட்களை எடுத்து, ஒரே நாளில் கூடைப் புகழோடு 'Man of the Match' பத்தாயிரம் ரூபாயும், கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு அளித்த பத்தாயிரம் ரூபாயும் பெற்றுச் செல்கிறேன்!'' என்று மகிழ்ச்சியோடு கைகுலுக்கிய போது சொன்னார் நரேந்திர ஹிர்வானி! வெற்றியும் பாராட்டு மொழிகளும் அவரது சங்கோஜ சுபாவத்தை நீக்கிவிட்டன!

நரேந்திர ஹிர்வானி உத்தரப்பிரதேசத்தில் கோரக்பூரில் பிறந்தவர். அவரது பெற்றோர் 'செங்கல் சூளை' வாணிபத்தைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிக் கட்டாயப்

படுத்திய போது தோரக்பூரிலிருந்து நழுவி படிப்புக்கும் கிரிக்கெட் விளையாட்டுக்குமாக மத்தியப் பிரதேசம் இந்தோருக்குக் குடி பெயர்ந்தார்! ஒரு சிறு அறையில் வாழ்ந்து வந்த நரேந்திர ஹிர்வானி. சஞ்சய் ஜக்டேல் அளித்த ஊக்கத்தில் இந்தோர் நேரு ஸ்டேடியத்துக்கே வந்து அங்கேயே தங்கலானார்! எந்த கிரிக்கெட் ஆட்டக்காரர் பாட்டிங் பயிற்சிக்கு வந்தாலும் எத்தனை மணி நேரமானாலும் அவர்கள் பிராக்டீஸுக்கு உதவ பௌலிங் செய்யச் சளைக்காதவர் ஹிர்வானி! பத்தொன்பது வயதினருக்கான கிரிக்கெட் குழுவில் ஆஸ்திரேலியாவுக்குச் சென்று 23 விக்கெட்களை வீழ்த்திய பெருமை இவருக்கு உண்டு! சண்டிகரில் மேற்கிந்தியத் தீவு குழுவினரின் ஆறு விக்கெட்களைச் சரித்ததால் சென்னை டெஸ்டுக்கு 'நுழைவுச் சீட்டு' கிடைத்து விட்டது இவருக்கு!

சிதம்பரம் ஸ்டேடியம் நரேந்திர ஹிர்வானியை மாபெரும் 'ஹீரோ' வாக்கி விட்டது. 33.3 ஓவர்களில் 6 மெய்டன் ஓவர் கண்டதோடு, 136 ரன்களை மேற்கிந்தியத் தீவுக்குக் கொடுத்து 16 விக்கெட்களைச் சரித்தார், நரேந்திர ஹிர்வானி.

சிதம்பரம் ஸ்டேடியத்தில் நரேந்திர ஹிர்வானியின் தோளில் கைபோட்டுக் கொண்டு ஸ்ரீகாந்த் சொன்னது: ''மேற்கிந்தியத் தீவுக் குழுவினரின் அனைத்து விக்கெட்களையும் மூட்டை கட்டிக் கொண்டு போகப் போகிறோம், பாருங்கள்!'' — ஸ்ரீகாந்த் சொன்னதைச் செய்து காட்டினார் ஹிர்வானி.

பெவிலியன் முதன் மந்திரி பாக்ஸில் ஆர். எம். வீரப்பன் அமர்ந்திருந்தார்.






* அரை சதம் போட்டதும் ராமன், பாட் உயர்த்தி ரசிகர்களின் வாழ்த்துக்கு நன்றி தெரிவிக்கிறார்.

அவருக்குப் பின்னால் சைதை துரைசாமி, மாட்ச் பார்த்ததோடு நில்லாமல் அரசியல் உபமானத்துக்கு வேறு ஹிர்வானியை இழுத்து விட்டாரே! இனி விளம்பரங்களுக்குக் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் பணம் வாங்குவது போல் அரசியல் பப்ளிஸிடிக்கு உதவியும் ராயல்டி கேட்கலாம் போலும்!

மேற்கிந்தியத் தீவு குழுவினர் ஏழு பவுலர்களைக் கிளப்பி இந்தியக் குழுவின் ரன்களை எட்டிப் பிடிக்க முயன்றனர். வால்ஷ் 1, லோகி 2, பட்ஸ் 3, டேவிஸ் 1. ஆயினும் முயற்சி பலிதமாகவில்லை. விக்கெட்டுகள் சரிய 'மேற்கிந்தியத் தீவுக் குழுவின் மானேஜர் ஹெண்ட்ரிக்ஸ் கன்னத்தில் கை ஊன்றியபடி, படு சோகத்துடன் பெவிலியன் மாடியில் அமர்ந்திருந்தார்.

காப்டன் ரவி சாஸ்திரியுடன் ஒரு மினி பேட்டி:

''மேற்கிந்தியத் தீவுக் குழுவினரிடமிருந்து வெற்றியைப் பறித்துக் கொள்ள நீங்கள் செய்த சாகசம் என்ன?''



ஹிர்வானியின் பந்து வீச்சில், கிரன்மோரே ஸ்டம்ப் செய்ய, அவுட் ஆனார் டிஜான்.



சதம் போட்ட கபிலின் ஸ்டைலான ஆட்டம்.

"லெக் ஸ்பின்னர் ஹிர்வானியிடம் எனக்கு அளவற்ற நம்பிக்கை. அவரது திறமையைப் பயன்படுத்தத் தீர்மானித்தேன். ஒரு நல்ல லெக்ஸ்பின்னர் பாஸ்ட் பௌலரை விட உபயோகமானவர். பொறுமையோடு அவரைத் தட்டிக் கொடுத்துப் போட வைத்தால் எதிர்க் குழுவினருக்குப் பேராபத்துத்தான்! நான் லெக் ஸ்பின்னரைத்தான் என் 'டிரம்ப் கார்டா'க வைத்துப் பயன்படுத்தினேன்!"

"புதிதாகக் கிடைத்துள்ள காப்டன் பொறுப்பை எப்படி நிர்வகிக்கிறீர்கள்? சக ஆட்டக்காரர்களிடம் பூரண ஒத்துழைப்புக் கிடைக்கிறதா?"

"ஒவ்வொரு பந்தயத்தையும் வெற்றிகரமாக ஆக்குவதில் கவனத்தோடு பாடுபடுகிறேன்! நூறு சதவிகிதம் சக ஆட்டக்காரர்களின் ஒத்துழைப்பு எனக்குக் கிடைக்கிறது. வெற்றிக் களிப்பில் அவர்களும் பங்கேற்கிறார்கள். வெற்றி வாய்ப்புக்கள் பெருகும் போது பிரச்னைகள் மறைந்து விடுகின்றன!"

"இளைஞர்கள் நரேந்திர ஹிர்வானி, டபிள்யூ. வி. ராமன், அஜாய் சர்மா பற்றி?"

"சிதம்பரம் ஸ்டேடியத்தில் இந்த மூன்று நட்சத்திரங்களுமே நன்கு சோபித்தார்கள். அவர்களுக்கு நல்ல எதிர்காலம் உண்டு."

"இந்தியக் குழுவுக்கு இன்னும் பாஸ்ட் பௌலர்கள் தேவையா? சுழல் பந்து வீச்சிலேயே சமாளிக்க முடியுமா?"

"முடியாது. இந்தியக் குழுவில் போதிய அளவு பாஸ்ட் பௌலர்கள் இருந்தால், '**World Beaters**' என்ற பெருமையை நாம் தொடர்ந்து தக்க வைத்துக் கொள்ளலாம்!"

"அனுபவம் மிக்க சுனில் காவஸ்கர், வெங்சர்க்கார் இல்லாத குறை தெரிகிறதா?"

"அந்தத் தலைசிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் இந்தியக் குழுவுக்கு இல்லாதது கஷ்டம்தான். ஆனாலும் கிரிக்கெட் பற்றிய பொன்மொழியொன்றை நினைவுபடுத்துகிறேன். 'தலைசிறந்த ஆட்டக்காரர்கள் வருவார்கள், போவார்கள். ஆனால் தொடர்ந்து ஆட்டம் தடைப்படாமல் முன்னேற வேண்டும்.' தலைசிறந்த ஆட்டக்காரர்களை விட கிரிக்கெட் ஆட்டம் உன்னதமானது! பல இளைஞர்கள் உருவாகி வருவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு."

— குண்டுமணி

படங்கள்: கே. என். சாரி

# மீட்கப்பட்ட கொத்தடிமைகளுக்கு மீண்டும் துயரம்!





குண்டுப்பட்டி விடுதலை நகர்: மீட்கப்பட்ட கொத்தடிமைகள்.

கொடைக்கானலிலிருந்து பஸ்ஸில் சென்று, சரியாகப் பதினெட்டாவது கி.மீ.யில் இருக்கும் பூம்பாறை என்னும் கிராமத்தில் இறங்கி, அங்கிருந்து ஏற்றங்களும் இறக்கங்களும் நிரம்பிய காட்டுப் பாதையில் — நடந்தால், 'இந்தப் பக்கங்களில் கஞ்சாச் செடி வளர்க்கிறாங்க சார்! உள்ளே போனா உயிரோட திரும்ப முடியாது' என்று வழிப்போக்கர்கள் வர்ணிப்பார்கள். அதைக் கேட்டுக்கொண்டு, பூம்பாறைப் பள்ளத்தாக்கின் அழகையும் ரசித்துக் கொண்டு— வலி தாளாமல் கெஞ்சும் முட்டிக் கால்களைச் சமாதானப்படுத்திக் கொண்டே சுமார் எட்டு கி.மீ. தூரம் நடந்தால் குண்டுப்பட்டி விடுதலை நகர் என்னும் மலையுச்சிப் பிரதேசத்துக்கு வந்து சேருவோம். இங்கேதான் கொடைக்கானல் மலைகளில் கொத்தடிமைகளாக இருந்து மீட்கப்பட்ட நூற்று ஐம்பத்தேழு இலங்கைத் தமிழர் குடும்பங்கள்





குடியமர்த்தப்பட்டிருக்கிறார்கள். அவர்களைச் சந்தித்தபோது தங்கள் சோகக் கதையைக் கூற ஆரம்பித்தார்கள்...

"ஏழு பேரைத் திரும்பவும் இந்தியாவுக்கு அழைச்சுக்கிட்டா இலங்கையில் நாலு பேருக்குக் குடியுரிமை வழங்கப்படும்'ன்ற சிரிமாவோ — சாஸ்திரி ஒப்பந்தத்தின் பேர்ல இந்தியா வந்தவங்க நாங்க. சுமார் பத்து வருஷத்துக்கு முன்னாடி நாங்க இந்தியா திரும்பின போது, கொடுக்கப்பட்ட உதவிப் பணத்தை வைத்துக் கொண்டு பலரும் பல இடங்கள்ல ஏதோ ஜீவித்துக் கொண்டிருந்தோம்.

"அந்தச் சமயங்களில்தான் 'டான் இந்தியா' கம்பெனியிலேர்ந்து ஒருத்தர் வந்தார். பட்டை உரிக்கிற வேலை. அக்கேஷியாங்கிற மரத்திலிருந்து உரிக்கணும். ஒரு கிலோ உரிச்சா முப்பது காசு கூலி. சாதாரணமா ஒரு ஆளு ஒரு நாளைக்கு ஐம்பது கிலோ உரிக்கலாம். குடும்பத்தில புருஷன், பெண்சாதி ரெண்டு பேரும் உரிச்சா ஒரு நாளைக்கு முப்பது ரூபாய்க்கு மேல் சம்பாதிக்கலாம்னு சொன்னார்.

"பல இடங்களில் சரியாக் கூலி வேலை கூடக் கிடைக்காமல் திண்டாடிக்கிட்டிருந்த எங்களுக்கும் — மண்டபம் முகாம்ல வந்து தங்கி எங்கே போய் எப்படிப் பிழைக்கிறதுன்னே தெரியாமல் தவிச்சுக்கிட்டிருந்த பலருக்கும் அதுவொரு வரப்பிரசாதமாத் தெரிஞ்சது. உடனே அவரோடு பலரும் குடும்பத்தோடு புறப்பட்டுப் போனோம்.

"ஆனால் அவுங்க சொன்ன மாதிரி ஒரு கிலோ பட்டைக்கு முப்பது பைசாக் கூலி கொடுக்கலே. ஏழு பைசா அளவுக்குத்தான் கொடுத்தாங்க. அதுவும் எங்களிடம் பணமாக் கொடுக்கலே. அரிசி, பருப்புன்னு பொருளாத்தான் கொடுத்தாங்க. எப்போதாவது பணத் தேவை ஏற்பட்டுப் பணம் கேட்டோம்னா, 'உங்க கணக்கில நூறு நூத்தைம்பதுன்னு கடன் தானே இருக்கு; பணம் எங்கிருக்கு? போய் வேலையைப் பாரு'ன்னு விரட்டிடுவாங்க. இந்தக் கொடுமையோடு புருஷன், பெண்சாதி ரெண்டு பேரும் சேர்ந்து எங்கேயும் வெளியில போகக் கூடாதுன்னும் தடை போட்டாங்க. அப்படிப் போனா எங்கே நாங்க அவுங்ககிட்டேர்ந்து தப்பிச்சுப் போயிடுவோமோன்னு அவுங்களுக்குப் பயம்!

"இந்த மாதிரி நிலைல நாங்க இருந்தப்போதான், 'கொடைக்கானலுக்குப் புதுசா ஒரு சப்-கலெக்டர் வந்திருக்காரு. குர்னீகால் சிங்குன்னு பேரு. ரொம்ப நல்லவரு. ஏழைங்களுக்கு உதவறவரு'ன்னு கேள்விப்பட்டோம். அவருகிட்டே சொன்னாலாவது நமக்கு ஒரு விமோசனம் பொறக்காதான்னு நாங்களும் ரகசியமா ஒரு மனு தயார் பண்ணி அவருகிட்டே கொடுத்தோம்.

"அவரும் வந்து பார்த்தாரு. விசாரிச்சாரு. எங்க நிலையைப் பார்த்து அதிர்ச்சியானாரு.



• முத்துலட்சுமி

உடனே நடவடிக்கை எடுத்தாரு. உடனே அவருக்கு எத்தனையோ மேலிடத்துப் பிரச்னைகள். இருந்தாலும் அவரு கலங்கலே. நியாயத்துக்காக நின்னாரு. இதுக்கு நடுவுல மதுரையில இருக்கிற மெஹ்பூ பாட்சாங்கிற சமூக சேவகரும் மத்தவங்களும் எங்க நிலையைச் சுப்ரீம் கோர்ட்டுக்குத் தெரியப்படுத்தினாங்க. சுப்ரீம் கோர்ட்டும் ஒரு கமிட்டி போட்டு உண்மையை விசாரித்தது. உடனே எங்களுக்கு ஏதாவது செய்யணும்னு தமிழ்நாடு அரசைக் கேட்டது.

"தமிழ்நாடு அரசும் 'கொடைக்கானல் பகுதியிலேயே 2,400 ஏக்கர் நெலம் இருக்கு. அதுல இந்தக் குடும்பங்கள் ஒவ்வொன்றுக்கும் இரண்டு ஏக்கர் விவசாய நெலம்; அதைச் சீர்திருத்த ஐயாயிரம் பணம்; ரெண்டு கறவை மாடுங்க; வீடு... எல்லாம் தர்றோம்'னு சொல்லி நூற்றி ஐம்பத்தேழு குடும்பங்களையும் கொத்தடிமை நிலையிலேர்ந்து விடுவிச்சது.

"சுப்ரீம் கோர்ட்டும் 'சரி அப்படியே செய்யுங்க. அதுவரைக்கும் குடும்பத்துக்கு மாதம் நூற்றிப் பத்து ரூபாயும் பெரியவங்க ஒவ்வொருவருக்கும் மாதம் பன்னிரண்டு கிலோ அரிசியும், சிறியவர்களுக்கு ஆறு கிலோ அரிசியும் தரணும்'னு உத்தரவு போட்டது.

"ஆனா இதுவரைக்கும் எங்களுக்குத் தமிழக அரசு நெலமேதும் கொடுக்கலே. கேட்டபோது 'இதோ இதுதான் உங்க நிலம்; விவசாயம் செய்யுங்கள்' என்று சில இடங்களை அதிகாரிகள் காட்டிய போது, 'இது எங்கள் பட்டா நிலம்; உள்ளே வந்தால் வீண் தகராறுதான் வரும்'னு அந்த நிலச் சொந்தக்காரங்க சொன்னாங்க. நாங்க என்ன செய்ய முடியும்?

''இவை எல்லாவற்றையும் விட வேடிக்கை என்னன்னு கேட்டீங்கன்னு எங்களுக்கான நிலம் எதுன்னு கண்ணுல காட்டாமலேயே, பட்டாவைப் பிடியுங்கனு அதிகாரிங்க எங்களுக்குப் பட்டா கொடுக்க முன் வந்தது தான்! 'நிலமே இல்லாம எப்படீங்க பட்டா தறீங்க?'னு கேட்ட போது, 'மொதல்ல பட்டாவை வாங்கிக்கங்க, பிறகு நிலத்தைப் பத்திப் பேசலாம்'னு சொல்றாங்க. நாங்க மறுத்தப்போ பட்டாவைத் தபால்ல அனுப்பிச்சாங்க. அதையும் திருப்பியனுப்பிச்சப்போ நேர்ல வந்து, 'பட்டாவை வாங்கிக்கலேன்னு கடைசில உங்களுக்கு வெட்டியான் வேலை தான் தர்றதா இருக்கோம்'னு சொல்லி எங்களுக்குத் தர்றத்துக்கிட்டிருக்கிற ரேஷனை டிலே பண்ணிக் தடுக்கிறாங்க. என்னங்க செய்யறது?' இத்தனை எதுக்குங்க? வர்ற வழியை நீங்களே பார்த்திருப்பீங்க... எப்படியிருக்குன்னு? சரிபண்ணித் தர்றேன்னுங்க; செய்யலே. அந்தப் பாதைலதான் உப்பு வாங்கப் போகணும்னுக்கூட நாங்க எட்டு கி.மீ. நடக்கணும்....

''இது சம்பந்தமா நாங்க பிரதமர், ஜனாதிபதி, அமைச்சர்கள்னு அத்தனை பேருக்கும் மனு அனுப்பிப் பார்த்து விட்டோம். அத்தனை ஏன்? கலெக்டருக்குக் கூட மனு அனுப்பிச்சோம். யாருமே கண்டுக்கலே. நாங்க உழைக்கிறதுக்குத் தயாராயிருந்தும் எங்களுக்கு வேலை இல்லே. இலங்கைல உழைச்சு உழைச்சுப் பழகிய எங்களுக்கு இங்கே அரசாங்கம் கொடுக்கிற ரேஷனை இலவசமா வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டிருப்பது ரொம்பவும் கேவலமா இருக்குது. அரசாங்கம் கடைசில எங்களை இப்படிச் செய்யும்னு தெரிஞ்சிருந்தா, பேசாம நாங்க கொத்தடிமைகளாகவே பட்டை உரிச்சுக்கிட்டு இருந்திருக்கலாமேன்னு தோணுது போங்க....'' என்று சொல்லி முடித்தார்கள், நம்மைக் கூட்டமாக வந்து சந்தித்த சந்திரமோகன், அசோகன், திருமதி முத்துலட்சுமி, மகாலிங்கம் ஆகியோரும் மற்றவர்களும்.

ஆரம்பத்தில், மீட்கப்பட்ட இந்தக் கொத்தடிமைகள் குடும்பங்களுக்கு வழங்க இரண்டாயிரத்து நானூறு ஏக்கர் இருப்பதாகச் சொன்ன அதிகாரிகள், பிறகு இரண்டாயிரம் ஏக்கர்தான் இருக்கிறதென்றும், பின்பு ஐந்நூற்றைம்பது ஏக்கர்தான் இருக்கிறதென்றும் அதன் பிறகு நூற்றுத் தொண்ணூற்றைந்து ஏக்கர்தான் தயாராக உள்ளதென்றும் படிப்படியாகக் குறைத்துக் கொண்டே வந்தனர். கடைசியில் நிலமே இல்லாமல் அனைவருக்கும் பட்டா வழங்கும் முஸ்தீபுகளில் இறங்கியதற்கு என்ன காரணம்?

''ஆக்ரமிப்புகள்தான் காரணம்'' என்கிறார்கள் பலரும். ''அரசு ரிகார்டுகளில் புறம்போக்காகக் காணப்படும் நிலங்களை அதிகாரிகள் அளக்க வரும் போதுதான் அது 'செல்வாக்கு' மிக்க பலராலும் ஆக்ரமிக்கப்பட்டுள்ள விஷயம் தெரிய வருகிறது. அந்தச் செல்வாக்குக்குப் பயந்து கொண்டுதான், கடைசியில் வேறுவழியில்லாமல், அப்பாவிகளான இந்த மக்களுக்கு நிலமில்லாமலேயே பட்டாக் கொடுத்துக் கை கழுவப் பார்க்கிறார்கள் அதிகாரிகள்...'' என்கிறார்கள் அவர்கள்.

உண்மையில் இந்த மக்களின் பிரச்னைகளை அரசாங்கம் உடனடியாகத் தீர்க்க விரும்பினால், வேறு எதுவுமே செய்யத் தேவையில்லை; மறுபடியும் கொடைக்கானல் சப்–கலெக்டராகக் குர்னிகால் சிங்கையே நியமித்தால் போதும்! உடனடியாகச் சட்ட விரோதிகளின் கொட்டம் அடக்கப்பட்டு விடும். இதுதான் பாதிக்கப்பட்ட அந்த மக்களுடைய கருத்து.

— இளங்கோவன்

அட்டை வண்ணப்படமும், மற்ற படங்களும்: கே. வி. ஆனந்த்

# அடுத்த இதழில்...

சிறந்த பெற்றோர்களாய் விளங்க...

- அனுபவங்கள்
- ஆலோசனைகள்

அட்டைப்படக் கட்டுரை





# புத்திசாலியான முதலீட்டாளர்களுக்கு மதிப்புமிக்க பரிசுகள்



## எங்களது புதிய வாடிக்கையாளருக்கு புத்தாண்டுபரிசுகள்

| சீட்டின் மொத்த மதிப்பு | தவணை மாதங்கள் | முன் அனுமதி எண் | |
|---|---|---|---|
| ரூ. 10,000 | ரூ 100×100 மாதங்கள் | 351 87 | |
| | ரூ 250×40 மாதங்கள் | 352 87 | சாப்பாட்டு தட்டு |
| ரூ. 15,000 | ரூ 500×30 மாதங்கள் | 73 87 | ஃப்ளாஸ்க் |
| ரூ. 20,000 | ரூ 800×25 மாதங்கள் | 344 87 | |
| ரூ. 25,000 | ரூ 250×100 மாதங்கள் | 502 87 | |
| | ரூ 625×40 மாதங்கள் | 503 87 | செம்பு அடிப்பாகம் கொண்ட குக்கிங் பான் |
| ரூ. 50,000 | ரூ 500×100 மாதங்கள் | 499 87 | |
| | ரூ 2000×25 மாதங்கள் | 500 87 | |
| | ரூ 1000×50 மாதங்கள் | 501 87 | அமெரிக்க டயமண்ட் பதித்த மூக்குத்தி (அல்லது) சுவர்க்கடிகாரம் |
| ரூ. 1,00,000 | ரூ 1000×100 மாதங்கள் | 498/87 | |
| | ரூ 2000×50 மாதங்கள் | 497 87 | சமைத்து பரிமாறும் பாத்திரங்கள் (அல்லது) H.M.T. கைக்கடிகாரம் |
| ரூ. 3,00,000 | ரூ 5000×60 மாதங்கள் | 496 87 | சுமித் மிக்ஸி |



அதிக முதலீடு கொண்ட சீட்டு நிறுவனம்

**அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் : ரூ. 25.00 லட்சம்**
**செலுத்தப்பட்ட மூலதனம் : ரூ. 19.00 லட்சம்**

# indu




மேலும் விவரங்களுக்கு எங்களின் ஏதாவதொரு கிளையை அணுகவும்:

## இந்து சிட் ஃபண்ட் (மதுரை) பிரைவேட் லிமிடெட்.

மத்திய நிர்வாக அலுவலகம்:
155, வடக்கு உஸ்மான் ரோடு, தியாகராயநகர், சென்னை-600 017.
போன்: 445529 & 447333

கிளைகள்:
154, வடக்கு உஸ்மான் ரோடு, தியாகராயநகர். சென்னை-600 017
போன்: 447888
220, இரண்டாவது மாடி, N.S.C. போஸ் ரோடு, ஜார்ஜ்டவுன்,
சென்னை-600 001. போன்: 25901 & 25178
194, வக்கீல் புது தெரு, மதுரை-625 001 போன்: 34940 & 31351
106, பெரிய தெரு, திருவண்ணாமலை-606 601. போன்: 2681
22, வணிகர் தெரு, காஞ்சிபுரம்-631 501 போன்: 3048

**GROW RICH**  **WITH INDU**



# N.S.K. பில்டர்ஸ்

குறைந்த செலவில் வீடு கட்ட வேண்டுமா?

இதோ! என்.எஸ்.கே. பில்டர்ஸ் உங்களுக்காக அளித்திடும் மாபெரும் சலுகை

## புரட்சித்திட்டம் புதுமைத்திட்டம்

1800 சதுர அடி மனையில் குறைந்த பட்சம் 500 சதுர அடி கட்டிடப் பரப்புள்ள ஒரு தனி வீடு

விலை சதுர அடி ஒன்றுக்கு ரூ. 200/- (மனை உட்பட)

வங்கி ஊழியர்கள் மற்றும் மாதச் சம்பளம் பெறுவோர்களுக்கு ஒரு அரிய வாய்ப்பு!



## 10% மாபெரும் விழாக்கால சலுகை

ஒரு மனையின் விலை ரூ. 20,000/- மட்டுமே

| |
|---|
| முதலில் செலுத்த வேண்டிய தொகை 50% மீதியை 90 நாட்களில் செலுத்தலாம். |

### வசதிகள்

1. எம்.எம்.டி.ஏ. (M.M.D.A.) அங்கீகாரம் பெற்றது. நெ. PPD 40 10/87
2. தெளிவான பத்திரங்கள்
3. மின்சார இரயில் மற்றும் பஸ் வசதிகள்
4. 10 அடி ஆழத்தில் சுவையுள்ள குடிநீர்
5. பள்ளிகள், ஆரம்ப சுகாதார நிலையங்கள் இவை அனைத்தும் அருகாமையில் உள்ளன.

**N.S.K.** நகர்,
திருநின்றவூர், சென்னை-602 024.

### சலுகைகள்

1. உடனடியாக வீடு கட்டுவதற்கு உண்மையில் விருப்பமுள்ளவர்களுக்கு 10% தள்ளுபடி வழங்கப்படும்.
2. முழுத் தொகையையும் செலுத்துவோருக்கு சிறப்புத் தள்ளுபடி அளிக்கப்படும்.
3. குரூப்பாக சேர்ந்து வாங்குவோர்களுக்கு சிறப்பு சலுகைகள் வழங்கப்படும்.

ஒரு சில மனைகளே உள்ளன. 15.1.88 முதல் 15.2.88 வரை இச்சலுகை அளிக்கப்படும். ஏமாற்றத்தை தவிர்க்க இன்றே தொடர்பு கொள்ளவும்.

மனைகளை இலவசமாகப் பார்வையிட 15.2.88 வரை தினசரி ஏற்பாடு செய்யப்படும்.

அணுக வேண்டிய முகவரி:



**N.S.K.** ரியல் எஸ்டேட்ஸ்

38-B, [illegible] (முதல் மாடி), தி. நகர்,
சென்னை-600 017. தொலைபேசி எண்: 445252, 442106

EXELADS / NSK 006 / 87




**சத்யராஜ் போன ஆண்டில் நூறு நாள் படங்கள் ஆறு தந்ததற்கு (கணக்கு சரியா?) ஒரு திருஷ்டி வேண்டாமா! அதுதான் அண்ணாநகர் முதல் தெரு.**

- காமெடி கதையா, சீரியஸான காதல் கதையா என்று அடையாளம் கண்டுபிடிக்க முயற்சி செய்வதற்குள் இடைவேளை வந்து விடுகிறது.
- ராதாவும் சத்யராஜும் மகா சீரியஸாகக் காதலிக்கிறார்களாம். எவனோ ஒரு கைரேகை ஜோசியன், 'உன் காதலியின் மார்பில் மச்சம் இருந்தால் நீ துபாய் போவாய்' என்று சொல்ல... உடனே சத்யராஜ் ஜாலியாக ஒரு டூயட் பாட... பாடலின் கடைசி வரி முடிந்த கையோடு சரக் என்று ராதாவின் சட்டையைக் கிழிக்கிறார் — மச்சம் பார்க்க. சத்யராஜ் கேரக்டர் பேக்குத்தனமானதா, இல்லை புத்திசாலித்தனமானதா? எதுவும் புரியவில்லை; புரிய வைக்கவில்லை.
- அம்பிகா — பிரபு கதை எதற்காக? 'அம்பிகாவைப் பார்த்து ரொம்ப நாளாச்சு' என்று பெருமூச்சு விடுபவர்களுக்காகவும், 'பிரபுவின் துள்ளலைப் பார்த்து ரொம்ப நாளாச்சு' என்று பெருமூச்சு விடுபவர்களுக்காகவும்!
- மனோரமா, வெண்ணிற ஆடை மூர்த்தி, சி. ஆர். சரஸ்வதி, ஜனகராஜ் என்று எல்லோரும் அண்ணா நகர் முதல் தெரு வாசிகள். (ஜனகராஜ் அந்தத் தெரு டிராவல் ஏஜென்ஸியில் வேலை செய்பவர்) 'டேய், மாதவா உனக்கு மட்டும் எப்படிடா இப்படி ஐடியா தோணுது... என்னவோ போடா' என்று சிச்சுவேஷனுக்குத் தகுந்த மாதிரி மாடுலேஷனை மாற்றி உச்சரிக்கும் ஜனகராஜைத் தவிர, வேறு யாராவது சிரிக்க வைக்க முயற்சியாவது செய்கிறார்களா?
- மச்ச விவகாரத்தில் காதலர் பிரிவது ஒரு லாஜிக் உதை என்றால், உண்மைத் திருடன் இன்னார்தான் என்று கடைசி வரை சொல்லாமல் விட்டது இன்னொரு லாஜிக் இடி.
- சத்யராஜ், 'ராம்சிங்' என்று பெயர் சூட்டிக் கொண்டு கூர்க்கா வேஷம் போடுகிறார். திடீர் என்று சம்பந்தமே இல்லாமல் பாட்டுப் பாடுகிறார். சம்பந்தமே இல்லாமல் சண்டை போடுகிறார். ஏன் டைரக்டர் சார், அந்தக் கடைசி ஸ்டண்ட் ஸீன் படத்தில் எதற்காக?
- பாட்டு, காமிரா, மியூஸிக் டிபார்ட்மென்டுகள், 'ப்ச்' இல்லை; ஓஹோவும் இல்லை.
- எடிட்டர் சாருக்குக் கைநடுக்கமோ என்னவோ... படத்தில் ஏகப்பட்ட 'ஜம்ப்ஸ்.'
- சத்யராஜ், ராதா, அம்பிகா, பிரபு, ஜனகராஜ் என்று அற்புதமான, மின்னும் நட்சத்திரங்களை வைத்துக் கொண்டு, போரடிக்காமல் திரைக்கதை அமைப்பது எப்படி என்று டைரக்டர் அடுத்த படத்திற்குள் கற்றுக் கொண்டால் பரவாயில்லை.

— ஜெயமன்மதன்


பிரபாகரன்
எலியைப் பிடிப்பது எப்படி?
அரசியல் தீர்வு


ஜானகி
இலங்கைப் பிரச்சினையில் மத்திய அரசுடன் ஒத்துழைப்பேன்....
இலங்கைப் பிரச்சினையில் மத்திய அரசுடன் ஒத்துழைப்பேன்.
இலங்கைப் பிரச்சினையில் மத்திய அரசுடன் ஒத்துழைப்பேன்.
இலங்கைப் பிரச்சினையில் மத்திய அரசுடன் ஒத்துழைப்பேன்
...இதையும் இம்போஸிஷன் எழுது! 'பப்புட்டு' தரேன்!
அகில உலக சமாதான வீரர் ராஜீவ் வாழ்க!


தமிழக இ. காங்கிரஸ் தலைமைக்குப் போட்டி!
ஏ.. போட்டியிலே வேஷ்டி, சட்டை கிழியாமெ பாத்துக்கிட்டீங்களா!
பழனியாண்டி
மூப்பனார்
எம்.பி.எஸ்



# கல்கி

1988 ஜனவரி 31
மலர்: 46 இதழ் 27
பிரபவ தை 17



# ஸி. ஐ. ஏ. சூழ்ச்சியா?

'இந்திய அமைதிப்படை இலங்கையிலிருந்து வெளியேறுவது ஈழத்தமிழர் நலனுக்கு உகந்ததாக எவ்வாறு கருதப்பட முடியும்?' என்ற அர்த்தமுள்ள கேள்வியை எழுப்பியிருக்கிறார் பாதுகாப்பு அமைச்சர் கே. ஸி. பந்த். ''தமிழர் நலன் பாதுகாக்கப்பட இந்திய அமைதிப் படையே உத்தரவாதம்'' என்ற அவரது கருத்து சரியானது.

'இலங்கை விஷயத்தில் இந்தியா ஒரு மனதாகப் பேச வேண்டும்' என்ற சுந்தர்ஜியின் அண்மைக்காலக் கோரிக்கை அனைவராலும் ஏற்கப்பட வேண்டிய ஒன்று. தலைக்குத் தலை தாறுமாறாக அமைதிப்படையைக் குறை கூறி வந்தால் நமது வீரர்களின் மனம் புண்படுவது மட்டுமல்ல, செய்கின்ற பணியில் நாட்டமிழந்தும் போவார்கள்.

இந்திய அமைதிப்படையைக் குறை கூறவிட்டாலும், இந்திய அரசு ஓர் அள்ளித் தெளித்த அவசரக் கோலமாக ஸ்ரீலங்காவுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தைக் — கல்கி உள்பட — குறைகூறியவர் பலர் உண்டு. ஆனால் அந்த விமர்சனத்தைக் கூட மறுபரிசீலனை செய்ய வேண்டிய நிலைமை தற்போது ஏற்பட்டிருக்கிறது. இந்தியா — இலங்கை ஒப்பந்தம் கையெழுத்தாகாமல் இருந்திருந்தால் அமெரிக்க — இலங்கை ஒப்பந்தம் ஒன்று உருவாகியிருக்கும் என்பதற்கு நம்பகமான சாட்சியங்கள் இப்போது கிடைத்திருக்கின்றன.

இதை வைத்துப் பார்க்கும்போது அமெரிக்கா, திரிகோணமலையில் தனது கடற்படை தளம் ஒன்று அமைக்க வேண்டும் என்பதற்காகவே, அதற்கு ஜெயவர்த்தனவை இசையச் செய்வதற்காகவே, ஸி. ஐ. ஏ. மூலம் விடுதலைப் புலிகளுக்கு ரகசிய ஆதரவு தந்து அவர்களை உசுப்பி விட்டுக் கொண்டிருந்தது என்ற வதந்தியில் பெருமளவு உண்மையும் இருக்கலாம் என்ற முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது.

ஸி. ஐ. ஏ. ஆதரவு விடுதலைப் புலிகளுக்கு இன்னமும் நீடிக்கிறதோ இல்லையோ, விடுதலைப் புலிகளின் தாக்குதல்கள் இன்னமும் ஓயவில்லை. இந்திய அமைதிப் படை தனக்குப் பழக்கமில்லாத ஒரு போர் முறையைச் சந்திக்க வேண்டியிருப்பது மட்டுமல்ல, பொது மக்களுக்குத் துன்பம் தரக் கூடாது என்பதால் ஒரு முழு வேக யுத்தமாக இதனைக் கருதி, பூரண ஆயுத பலத்தோடு எதிர்த் தாக்குதல் நடத்தவும் முடியவில்லை. இத்தகைய ஓர் இரண்டும்கெட்டான் நிலையிலும் அமைதிப் படை மிகுந்த பராக்கிரமத்துடனும் பொறுமையுடனும் இயங்கி வருகிறது. வடக்கே வென்றது போல் கிழக்கேயும் நமது வீரர்கள் காலக்கிரமத்தில் வெற்றி பெறுவார்கள். புலிகளை மட்டுமின்றி அவர்களுடைய கோயபெல் பிரசாரங்களையும் முறியடிப்பார்கள்.

விடுதலைப் புலிகளின் புதிய சட்ட மறுப்பு இயக்கம் கவலை அளிப்பதாக உள்ளது. அரசு ஊழியர்கள் காரியாலயத்துக்குச் செல்லக் கூடாது என்று அச்சுறுத்துகின்றனர்; காவல் நிலையங்களைத் தாக்கிவிட்டுத் தப்பி ஓடுகின்றனர்; சிறைச்சாலைகளைத் தாக்கிக் கைதிகளை விடுவித்து விடுகின்றனர். விடுதலைப் புலிகளின் இந்தப் புதிய சாகசத்தையும் நமது அமைதிப் படையினர் சக்தி வாய்ந்த விதமாகச் சந்தித்து வெற்றி கொள்வார்கள் என்ற நம்பிக்கை நமக்கு இருப்பினும், அவர்கள் ஈழத்திலேயே வெகுகாலம் நீடித்து இருப்பது, பொருளாதாரக் கண்ணோட்டத்திலும் சரி, மனோதத்துவ நோக்கிலும் சரி, நல்லதல்ல என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும். அவர்கள் படிப்படியாக ஈழத்தை விட்டு வெளியேறுவதற்கான சூழ்நிலை உருவாக்கப்படுதல் மிகவும் அவசியம்.

எனவே, தில்லியில் ராஜீவும் ஜெயவர்த்தனவும் சந்திக்கும்போது ராணுவத் தீர்வு ஒருபுறமிருக்க, அரசியல் தீர்வுக்கும் அவசரமாக வழிகாண வேண்டும். ஒப்பந்தத்தில் உறுதி செய்யப்பட்ட உரிமைகளைத் தமிழர்களுக்கு முழுமையாக வழங்கி, துரிதமாக அங்கு மக்கள் ஆட்சி மலர வகை செய்ய வேண்டும். அவ்வாறு அமையும் சுயாட்சி அரசுக்கு, விடுதலைப் புலிகளைச் சமாளிக்க உதவியாகச் சில காலம் அங்கு அமைதிப் படை இருந்து உதவலாம். ஆனால் அதுவே நிரந்தர ஏற்பாடாகிவிடக் கூடாது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# காதல் விளையாட்டு

**Power Play** — செக்கோஸ்லோவாக்கியா தேசத்துப் படம். திரையில் தொண்ணூற்று ஐந்து நிமிடங்கள். தொண்ணூற்று ஐந்து கவிதையான நிமிடங்கள் என்று சொல்லலாம். காமிரா அவ்வளவு சூப்பர். டைரக்டர் மேரி போலினகோவா (எதற்கு வம்பு இங்கிலீஷில் டைரக்டர் பெயர் Marie Poleanakova) படத்தின் விறுவிறுப்புக்கு எத்தனை வாழ் நாட்களைப் பலிகொடுத்தாரோ தெரியவில்லை. பின்லாண்டு தேசத்தின் பின்னணி. அற்புதமான பின்னணி, படத்திற்கு உயிரைத் தந்திருக்கிறது.

ஒரு சாதாரண கதையை, சொல்லும் விதத்தில், காமிராவைக் கையாளும் விதத்தில், லொகேஷன்களைத் தேர்ந்தெடுக்கும் விதத்தில், அசாதாரணமான கதையாகவும், படமாகவும் மாற்றலாம் என்னும் பாடத்தைப் படத்தின் டைரக்டர் அழுத்தம் திருத்தமாகச் சொல்லுகிறார். நம் பக்கத்துச் சினிமா டைரக்டர்கள் கற்றுக் கொள்ள வேண்டும்.

இதோ கதை.

இந்தக் கதையை எப்படி படமாக எடுத்திருப்பார்கள் என்பதைப் படத்தைப் பார்க்காத உங்களின் யூகத்திற்கு விடுகிறோம்.

நாளை தமிழ் வெள்ளித்திரையில் இது ஒருவேளை தமிழ்ப் படமாக மின்னினால் உங்கள் கற்பனை எவ்வளவு தூரம் சிறகடித்திருக்கிறது என ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம்.

**“நா**னு?'' — ஸோபியா விரல்களைக் கோத்துக் கோத்துப் பிரித்ததில் நெர்வஸ்னஸ் இருந்தது.

''நீ தான்... நாங்கள் கவனித்திருக்கிறோம். எத்தனையோ ரிப்போர்ட்டர்கள் எட்வர்டைப் பேட்டி எடுத்திருக்கிறார்கள். ஆனால் நீ கேள்வி கேட்கும் போது மட்டும் அவன் திணறுகிறான். காரணம் அவனுடைய கவனம் உன் கேள்விகளில் இல்லை. உன் மேல் இருக்கிறது...''

''என்னை வெட்கப்படச் செய்கிறீர்கள், எடிட்டர் சார்...''

''நம் நாட்டிற்காக நீ இந்தச் சேவையைச் செய்தே ஆக வேண்டும், ஸோபியா... ப்ளீஸ், மறுக்காதே...''

''எதற்கும் என் அம்மாவைக் கேட்டுவிட்டு நாளைக்குச் சொல்கிறேன் சார்.''



**“அ**ம்மா...'' — ஸோபியா, அம்மாவின் விரல்கள் வேகமாக ஸ்வெட்டர் பின்னுவதை வேடிக்கை பார்த்துக் கொண்டே கொஞ்சலான குரலில் கூப்பிட்டாள். ''நீ எனக்குப் பதில் சொல்லவேயில்லை.''

''யோசித்து விட்டேன், ஸோபியா... நம் ஹாக்கி டீம் மறுபடி மறுபடி தோல்வியைச் சந்தித்து விட்டது. அவர்களுக்கு வேறு வழியில்லை... போ, உதவு.''

''நான் பத்து நாட்கள் உன்னைப் பிரிந்திருக்க வேண்டுமே, அம்மா.''

''தனிமை எனக்குப் புதிதில்லை, ஸோபியா. ஆனால் உன் வயதையும் கடந்து வந்தவள் நான் என்ற முறையில் உனக்கு ஒரு விஷயம் மட்டும் சொல்ல நினைக்கிறேன்.'' — அம்மா தன் ஸ்வெட்டர் ஊசிகளையும், கம்பளி நூல் கண்டையும் கட்டிலில் வைத்து விட்டு ஸோபியாவின் நீளமான கூந்தலை வருடிக் கொடுத்தாள்.

''நீ ரொம்ப அழகு, ஸோபியா. இருபது வயதின் இளமை உன் உடம்பில் தங்கம் போல் மெருகேறியிருக்கிறது. ஓர் ஆண்மகனை — அதுவும் — உலகப் புகழ் பெற்ற ஹாக்கி கேப்டனை அடிக்கடி சந்திக்கப் போகிறாய். சலனங்கள் உன் மனத்தைப் பாதிக்காமல் பார்த்துக் கொள்.''

''நிச்சயமாக அம்மா...'' — ஸோபியா அம்மாவின் கருணையான நெஞ்சில் சாய்ந்து

கொண்டாள்.

"ஹல்லோ லேடி ரிப்போர்ட்டர்! என்ன இனிய அதிர்ச்சி!"

எட்வர்டு அறைக்கதவை அகலமாகத் திறந்தான். முகத்தில் ஷேவிங் நுரை. சிவப்பு உதடுகளில் சந்தோஷச் சிரிப்பு. கண்களில் ஆச்சரியம்.

"ஸாரி... நான்... அப்புறம்..." ஸோபியா தயங்கினாள்.

"இட் இஸ் ஆல்ரைட். உள்ளே வா!"

ஸோபியா சற்றே லஜ்ஜையோடு அறைக்குள் நுழைந்தாள். "உங்கள் நாட்டில் ஹோட்டல் அறைகள் கூட எவ்வளவு வித்தியாசமாயிருக்கின்றன!"

"எப்போது வந்தாய்?" — எட்வர்டு கண்ணாடியில் பார்த்துப் பேசினான்.

"இன்று காலை ஃப்ளைட்டில். ஸாரி, உங்களிடம் முன் அனுமதி பெற முடியவில்லை... நான் வந்திருப்பது சில நாட்கள் தொடர்ந்து உங்களைச் சந்தித்துப் பேட்டி எடுக்க..."

"பேட்டியா! உங்கள் ஊரில் எத்தனையோ முறை சந்தித்திருக்கிறாயே?"

"உங்களைப் பற்றி ஒரு தொடர் கட்டுரை எழுதச் சொல்லி எங்கள் எடிட்டரின் உத்தரவு."

"இத்தனை இளமையான, அழகான, துடிப்பான பெண்ணுக்கு நான் எப்படி நோ சொல்ல முடியும்? பட், இப்போது நான் அவசரத்தில் இருக்கிறேன். இன்றைக்கு ஒன்பது மணிக்கு எங்களுக்கும், கென்யாவுக்கும் இடையில் மேட்ச் இருக்கிறது. நீயும் வாயேன்!"

"சந்தோஷமாக!"

மைதானத்தில் கூட்டம் நிரம்பி வழிந்தது. பச்சைக் கார்ப்பெட் விரித்தது போல் ஹாக்கி கிரவுண்டு. கோல்கீப்பர்கள் விண்வெளிக்கே போகிறவர்களைப் போல ஹெல்மெட்டும், கனமான உடைகளும் அணிந்திருந்தார்கள்.

இரண்டு டீம்களும் எம்பி எம்பிக் குதித்துக் கொண்டு, கைகளையும், கால்களையும் உதைத்து, நீட்டி தயார்ப்படுத்திக் கொண்டிருந்தன. எட்வர்டு தன் குழுவின் சகாக்களுக்குக் கடைசி நிமிட ஆலோசனைகளைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

ஸோபியா காலரியின் சௌகரியமான உயரத்திலிருந்து பைனாகுலர் வழியே எட்வர்டை வட்டமிட்டிருந்தாள். அவன் கைகளையும், முகத்தையும் எவ்வளவு தூரம் ஆட்டி உணர்ச்சிகரமாகப் பேசிக் கொண்டிருக்கிறான்! காப்டன் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும். அவன் குழுவின் விளையாட்டு வீரர்கள் அத்தனை பேரும் கூரான கவனத்துடன் அவன் உதிர்க்கும் ஒவ்வொரு வார்த்தையையும் தேவ வாக்காக ஏற்றுக் கொள்ளுவது கூட பைனாகுலர் வழியே புலப்பட்ட மாதிரி இருந்தது.

விசில்கள் ஊதப்பட்டு மேட்ச் ஆரம்பமானது.

பிளேயர்கள் கால்களில் சக்கரம் கட்டிக் கொண்டது போல் சுறுசுறுப்பாக மைதானத்தின் சகல சென்டி மீட்டர்களையும் ஆக்ரமித்





* பணம் இல்லாவிடில் ஒருவனுக்கும் உன்னைத் தெரியாது; பணம் இருந்தால், உன்னையே உனக்குத் தெரியாது!

— டென்மார்க் பழமொழி.

* நாயோடு தாராளமாய்ப் பழகலாம். ஆனால், கையிலுள்ள கம்பை விட்டு விடாதே!

— அரேபியப் பழமொழி.

தொகுப்பு: மதுரை ஜோ.

தார்கள்.

அதோ, அதோ முதல் கோல்! ஆண்டவனே.... அதற்குள் இரண்டாவது! கென்யாவின் டீமை முன்னேற விடாமல் மூன்றாவதும்!

காலரியில் சந்தோஷமாகக் கைதட்டியவர்கள் ஓய்ந்த பின்னும் ஸோபியா தட்டிக் கொண்டிருந்தாள்.

எட்வர்டு, நீ எப்படி மாஸ்ஹீரோவானாய் என்று எனக்குப் புரிகிறது!

ஸோபியா மாலை ஐந்து மணி எப்போது வரும் என்று ஏங்க ஆரம்பித்தாள்.

ஹோட்டல் ரெஸ்டாரண்ட்.

மேஜையின் எதிரெதிர் நாற்காலிகளில் ஸோபியா, எட்வர்டு.

''நான் ரொம்ப சந்தோஷமாயிருக்கிறேன்...'' என்றான் எட்வர்டு. ''என்ன வேண்டுமோ, ஆர்டர் செய். இன்றைக்கு என்னுடைய ட்ரீட்...''

''என்ன வேண்டுமானாலும்?'' — ஸோபியாவின் கண்களில் குறும்பு மின்னியது.

''என்ன வேண்டுமானாலும்...''

''இந்த மெனு கார்டில் கடைசியாய் இருக்கும் அயிட்டம்.''

எட்வர்டு ஆர்வத்தோடு மெனு கார்டை வாங்கிப் பார்த்தான். ''ஏய், அது ஹோட்டல் ஓனரின் பெயர்!'' — வாய்விட்டுச் சிரித்தான். ''நான் ஏன் சந்தோஷமாயிருக்கிறேன் என்று உன்னிடம் சொல்லவில்லையே...?''

''சொல்லுங்கள்..''

''இன்றைக்கு உன் முகத்தைக் காலையில் பார்த்த அதிர்ஷ்டம் மேட்சில் மூன்று கோல்களும் எங்கள் டீமிற்கே கிடைத்து விட்டது. அது முதல் சந்தோஷம். இரண்டாவது சந்தோஷம்...'' எட்வர்டு தயங்கி விட்டுச் சொன்னான். ''நீ''

''நானா?''

''ஆம்.. உன் முகத்தைப் பார்த்தால் எனக்கு ஒரு புத்துணர்ச்சி வருகிறது. நான் சொன்னால் நீ நம்ப மாட்டாய்... இன்றைக்கு மேட்ச் நடக்கும் போது அடிக்கடி உன் முகத்தை நான் நினைத்துக் கொண்டேன். என் வீரர்களுக்குச் சரியான குறிப்புக்கள் கொடுக்க முடிந்தது.''

''நீங்கள் அநியாயத்திற்குப் புகழ்கிறீர்கள்!'' — ஸோபியாவின் கன்னங்கள் சிவந்தன.

(ஸோபியா, விஷயத்திற்கு வா. நீ வந்தது எதற்காக? எட்வர்டின் வெற்றி ரகசியங்களை ஒவ்வொன்றாக அவனிடமிருந்து கறக்க. கமான், ஸ்டார்ட்.)

''எட்வர்ட்...''

''ம்?''

''அதெப்படி நீங்கள் அவ்வளவு சரியாக உங்கள் டீமை செலக்ட் செய்கிறீர்கள்?''

''ஸிம்ப்பிள். ஹாக்கி, ஹாக்கி, ஹாக்கி..''

''எனக்குப் புரியவில்லை...''

''உண்மையிலேயே விளையாட்டின் மீது ஆர்வமும், காதலும், சதா நாளைய மேட்சைப் பற்றிய நினைப்பும் இருப்பவர்களைத் தான் என் டீமில் சேர்த்துக் கொள்கிறேன். சொன்னால் நம்ப மாட்டாய்... இன்றைக்கு மூன்றில் இரண்டு கோல்கள் போட்டானே பென்னட், நேற்றிரவு அவன் மனைவி இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். ஆனால் பென்னட், அவன் சந்தோஷப்பட்டான்.. எங்களுக்கெல்லாம் சாக்லேட் விநியோகம் செய்தான். மனைவியோடு இரண்டு நிமிடம் போனில் பேசினான். தட் இஸ் ஆல். இந்த ஸீரீஸ் முடியும் வரை அவனுக்கு ஹாக்கி தவிர வேறெதற்கும் நேரமில்லை..''

''ஆனால்... ஆனால்... அது மனிதாபிமானம் இல்லாத செயலாக மாறிவிடாது?''

''நீ கேட்டது என் பிளேயர்கள் எப்படி இவ்வளவு ஸ்மார்ட்டாக இருக்கிறார்கள் என்று. மனிதாபிமானம் பற்றிப் பிரசங்கம் செய்ய நான் எதற்கு? நீ சர்ச்சிற்குப் போயிருக்க வேண்டும்..'' — எட்வர்டு சிரித்துக் கொண்டே சொன்னான்.

''சரி உங்கள் டீமை விடுவோம். எதிரி டீமில் இதே போல் திறமையான பிளேயர்கள் இருந்தால் அவர்களை எப்படி சமாளிக்கிறீர்கள்?''

''இது நல்ல கேள்வி...'' — எட்வர்டு ஐஸ் கிரீமை ஸ்பூனால் எடுத்து வாய்க்குள் தள்ளிக் கொண்டே பேசினான். ''இதை நான் சொல்லக் கூடாது... இருந்தாலும், சொல்கிறேன். ஹாக்கி பேட்கள் வளைந்திருப்பவை — வசதியானவை. வேண்டாதவன் காலில் மாட்டி இழுக்க...''

''மை காட்! ஆனால்...'' — ஸோபியா பதறினாள்.

''ஆனால்களை நான் யோசித்தால் இன்றைக்கு உலகிலேயே பெஸ்ட் டீம் என்று நாங்கள் உயர்ந்திருக்க மாட்டோம், ஹனி...''

எட்வர்டு சுலபமாகப் பேசினான். ஹோட்டல்கள், சினிமா தியேட்டர்கள். அத்தனை பேரும் விலகிப் போன பின் பரந்த வெறுமையான விளையாட்டு மைதானம். காலியாகி விட்ட காலரியின் கடைசிப் படிகள் — சந்திப்புகள் தொடர்ந்தன. ஆறு நாட்களின் இனிமையான நேரங்கள். சந்தோஷம் தோய்ந்த நிமிடங்கள். ஸோபியா அவன் நெஞ்சிற்குள் நூறாயிரம் பட்டாம்

பூச்சிகளை உணர்ந்தாள். இரவு படுக்கப் போகுமுன் மானசீகமாகத் தன் பத்திரிகை எடிட்டருக்கு நன்றி சொன்னாள்.

எட்வர்டு என்ற உற்சாக மனிதனை இத்தனை நெருக்கமாக, பிரத்யேகமாக, அழுத்தமாக, ஆழமாக அலச எத்தனை பேருக்கு வாய்ப்புக் கிடைத்து விடும்?

ஓ, நோ, நாளைக்கு நான் ஊருக்குத் திரும்ப வேண்டுமா? இன்றைய இரவு அப்படியே இந்த வருடம் முழுதும் நீண்டு விடக் கூடாதா?

எட்வர்ட், எட்வர்ட், எட்வர்ட்...

போன் மணி கிணு கிணு என்று அவள் ஜபத்தைக் கலைத்தது.

''ஹலோ..''

''ஸோபியா?'' — எட்வர்டின் குரல்!

''நானே தான்'' — ஸோபியா படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள். தன் உடைகளை அவசரமாகச் சரி செய்து கொண்டாள்.

(முட்டாள், இது போன் தான்! அவன் உன்னைப் பார்க்கப் போவதில்லை.)

''நாம் இப்போது கொஞ்சம் பேச முடியுமா?''

''ஷ்யூர்'' — என்றாள். ''பத்து நிமிடங்களில் கீழே ரெஸ்டாரண்ட்டில் சந்திப்போம்...''

ஸோபியா பரபரப்பாக எழுந்து பாத்ரூமுக்கு ஓடினாள். தண்ணீர் அடித்து முகத்தைப் பலமுறை கழுவினாள். கண்ணாடிக்கு எதிரே மையை அழகாகத் தீற்றிக் கொண்டாள். ப்ளூ... ரெட்... வேண்டாம்... இந்த வெளிர்பச்சை உடைதான் இரவு நேரத்தில் அமைதியாக அவனைக் கவர்ந்திழுக்கும்.

(டியர், டியர், நீ என்ன அவனைக் காதலிக்க ஆரம்பித்து விட்டாயா, என்ன?

சிச்சி, சீச்... ஆமாம், ஆமாம், ஆமாம்! ஐ லவ் ஹிம் ஸோமச்!)

''ஸோபியா... எனக்கு... எனக்கு வார்த்தைகள் தடுமாறுகின்றன. நீ நாளைக்கு நிச்சயம் புறப்பட வேண்டுமா?'' — எட்வர்டு ஸோபியாவின் மெலிந்த விரல்களைப் பற்றிக் கொண்டான்.

''என் தேசத்தில் எனக்காக நிறைய வேலைகள் காத்திருக்கின்றன, எட்வர்ட். என் வாழ்க்கையின் மிக இனிமையான ஆறு நாட்களை நான் இந்த நாட்டில் கழித்திருக்கிறேன்...'' — ஸோபியாவின் குரல் நடுங்கியது. ''சொல்லாமல் இதயத்தில் பூட்டி வைக்க முடியவில்லை... எட்வர்ட், ஐ லவ் யூ!'' (முட்டாளே, அழுது விடாதே!)

எட்வர்டு அவள் கண்களை உன்னிப்பாகப் பார்த்தான். நாவால் உதடுகளை நீவிக் கொண்டான். பேசுவதற்காக வாய் திறந்து வார்த்தைகள் வராமல் தவித்தான். ஸோபியாவின் கையிலிருந்து தன் கையை விடுவித்துக் கொண்டான்.

''ஸோபியா. என் உணர்ச்சிகளும் கிட்டத்தட்ட இதே ரீதியில் தான் என்னை இழுத்துப் போயின. ஆனால் ஹாக்கிதான் என் முதல் காதல்... நான் உனக்கு முழுமையான சந்தோஷத்தைக் கொடுக்க முடியாது. நாம் சந்தோ



மனைவி: எக்ஸாம் ஹால் சூப்பர்வைஸராக உங்களைப் போட்டிருக்கிறதுக்குப் போய் ஏன் இப்படி இடிஞ்சு போய் உட்கார்ந்திருக்கீங்க?

கணவன்: காப்பியடிக்க உதவினால் இரண்டு வருஷம் ஜெயில்! காப்பியடிக்க உதவலைன்னா மாணவர்கள் கத்தியைக் காட்டி மிரட்டறாங்க! நான் என்னதான் பண்றது?

— உ. ராஜாஜி.



அவர்: ''ஆபரேஷன் பண்ணும் போது, 'ஸ்பாஞ்'சை வச்சுத் தைச்சுட்டாரு டாக்டர்...''

இவர்: ''அய்யய்யோ...! அப்புறம்...?''

அவர்: ''அப்புறம் என்ன... தண்ணி தாகம் அதிகமாயிடுச்சு...''

— கோ. க. சுரேஷ்.



மனைவி: எதுக்குச் சட்டைப் பைக்குத் தீபாராதனை காட்டறீங்க?

கணவன்: ஒரு செண்டிமெண்ட் தான்! அப்பத்தான் ஆபீஸில் இன்று லஞ்சம் நிறைய வந்து, பை நிறையும்!

— உ. ராஜாஜி.

ஷத்தோடு பிரிவதே நல்லது என்று நினைக்கிறேன்..."

"எட்வர்ட்!"

"வேண்டாம் ஸோபியா... எப்போதுமே கடைசி தினம் தான் மிக மிக இனிமையான தினம். நாம் நடக்காததைப் பேசி மூடு அவுட் ஆக வேண்டாமே. ப்ளீஸ்... என் நினைவாக உனக்கு ஒன்று வாங்கி வந்தேன், ஸோபியா..."

எட்வர்டு அந்தச் சின்னச் சதுர டப்பாவைத் திறந்தான். இருட்டிலும் டாலடிக்கும் வைரக்கல் பதித்த மோதிரம்.

"நான்... நான் உங்களுக்கு எதுவும் வாங்கி வைக்கவில்லையே, எட்வர்ட்..."

"உன் முகமும், உன்னுடன் செலவழித்த கணங்களும் என் ஆல்பத்தில் பதிந்து விட்டன, ஸோபியா. அது போதும்..."

ஸோபியா, தொண்டையில் பந்து அடைக்க, தன் சிறப்பான புன்னகையை அணிந்து கொண்டாள்.

"என்ன ஆயிற்று, ஸோபியா, வெற்றியா, தோல்வியா?" — அம்மா ஆர்வமாகக் கேட்டாள்.

"இரண்டுமே" என்றாள் ஸோபியா, பெட்டியிலிருந்து துணிகளை வெளியே எடுத்துக் கொண்டே. "எட்வர்டு எப்படி சிறப்பான காப்டனாயிருக்கிறான்.. அவனுடைய டீம் வெற்றி பெற என்னென்ன வழிமுறைகளைக் கையாள்கிறான் — அத்தனை விவரங்களையும் என்னிடம் சொல்லி விட்டான்.. ஒற்றாடல் செய்த குற்ற உணர்ச்சிதான் எனக்கு..."

"எடிட்டர் என்ன சொன்னார்?"

"அவருக்கென்ன.. அத்தனை பொய்ப் பற்களும் தெரிய பலமுறை சிரித்துக் காட்டி விட்டார். எதிர் டீமின் வழிமுறைகள் தெரிந்து விட்டதே என்று ஹாக்கி போர்டு அவருக்கு ரகசியமாக எத்தனையோ நன்றிகள் சொல்லப் போகிறது..."

"தோல்வி என்றாய்?"

"ரிப்போர்ட்டர் ஸோபியாவிற்கு வெற்றி. உன் மகள் ஸோபியாவிற்குப் பர்ஸனலாகத் தோல்வி!" — ஸோபியா அதற்கு மேல் உணர்ச்சிகளை அடக்க முடியாமல் அம்மாவின் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டு அழ ஆரம்பித்தாள்.

டெலிப்ரிண்டரின் தடதட தடதட. டெலிபோன்களின் கண கண கண. மனிதர்களின் பேச்சுக் குரல்கள்.

ஸோபியா மேஜை மீது குனிந்து ரிப்போர்ட் எழுதிக் கொண்டிருந்தாள். வலது கையில் அந்த வைர மோதிரம் அவ்வப்போது அவளைப் பார்த்துக் கண்ணடித்தது.

"ஸோபியா."

இருக்க முடியாது. ஸோபியா நம்ப முடியாமல் நிமிர்ந்தாள்.

"எட்வர்ட். நீங்கள் எப்படி இங்கே...? உட்காருங்கள்.. உட்காருங்கள்..."

"நாம் வெளியே போய்ப் பேச முடியுமா?"

மொத்த ஆபீஸும் வேடிக்கை பார்க்க அவர்கள் வெளியேறினார்கள்.

"ஸோபியா, நான் உன்னை அவசரப்படுத்துவது தப்புத்தான்... ஆனால்..." — எட்வர்டு ஸோபியாவைக் காதலுடன் பார்த்தான். "நான் இரண்டு மேட்ச்களில் தோற்று விட்டேன். காரணம் நீ..."

"வாட்? வெற்றிகளுக்குத்தான் நான் காரணம் என்று சொன்னீர்கள், மறந்து விட்டீர்களா?" — ஸோபியா புன்னகையுடன் கேட்டாள்.

"என் வெற்றிக்கும், தோல்விக்கும் நீ தான் காரணம் ஸோபியா. என் கான்ஸன்ட்ரேஷன் போய் விட்டது. எப்போதும் உன் நினைவு என்னைத் துரத்துகிறது. வேட்டையாடுவது கையில் கிடைத்தவுடன்தான் இரை மீது இருக்கும் ஆர்வம் குறையும் ஸோபியா..."

"எட்வர்ட்... எனக்கு இந்த எட்வர்டை விட அன்றைக்கு என் காதலை மறுத்த எட்வர்ட் தான் பிடித்திருக்கிறது. யூ நோ வை? நான் என்றைக்கும் உங்கள் நினைவுகளைத் துரத்த வேண்டும் என்று தான் ஆசைப்படுகிறேன். உங்களுக்குச் சொந்தமாகி, என் மீதிருக்கும் ஆர்வம் உங்களுக்குக் குறைவதை நிச்சயம் நான் விரும்பவில்லை. எட்வர்டால் கான்ஸன்ட்ரேட் பண்ண முடியவில்லை என்பதை நான் ஒப்புக் கொள்ளவில்லை. நீங்கள் ஒவ்வொரு மேட்சிலும் — அது என் தேசத்திற்கு எதிராக இருந்தால் கூட — வெற்றி பெறும் ஒவ்வொரு முறையும் நான் உங்களுக்கு ஒரு முத்தம் கொடுத்ததாக நினைத்துக் கொள்ளுங்கள்..."

"நான் உன்னை மணந்து கொள்ள விரும்புவது தப்பா, ஸோபியா?"

"எனக்கு ஏற்கெனவே மணமாகி விட்டதே... இதோ பாருங்கள், கல்யாண மோதிரம்... எட்வர்டு என்ற தன்னம்பிக்கை மிகுந்த ஆண்மகன் சூட்டி விட்டது..."

ஸோபியா அந்த வைர மோதிரத்தை உயர்த்திப் பிடித்தாள். "ஆல் தி பெஸ்ட்" என்று எட்வர்டின் கையை அழுத்தமாகப் பிடித்துக் குலுக்கினாள்.

திரும்பி நடந்தாள்.

— **ஜெயமன்மதன்**

"உங்க வீட்டில திருட்டுப் போயிட்டுதுன்னு போலிஸ்ல கம்ப்ளெயிண்ட் கொடுத்தியே, போலிஸ் என்ன செய்தாங்க?"



"மிச்சம் மீதி இருந்ததைப் புலனாய்வுக்குத் தேவைப்படுதுன்னு எடுத்துட்டுப் போயிட்டாங்க!"

— கடுவை கோபால்சாமி.

# அவளுக்கும் கவனிப்புத் தேவை !

காலை உணவு தயாரித்தல், என் குழந்தைகளை பள்ளிக்கு அனுப்ப தயார் செய்தல், பகலுணவு தயாரித்தல், கடைகளுக்குப் போவது, வீட்டையும் குடும்பத்தையும் பார்த்துக் கொள்வது...நாள் முழுவதும் ஓயாத வேலை.

ஹார்லிக்ஸ் பருகினால் ஊட்டச்சத்து கிடைக்குமென என் டாக்டர் சிபாரிசு செய்தார். நாள் முழுவதும் எனக்கு வேண்டிய சக்தியையும், பலத்தையும் ஹார்லிக்ஸ் அளிக்கிறது—மதிப்பு மிக்க மாலை நேரங்களை என் குடும்பத்துடன் அனுபவிக்க புத்துணர்ச்சியோடு இருக்கிறேன்.

ஹார்லிக்ஸ் முக்கிய இயற்கை ஊட்டச்சத்துக்கள் நிறைந்தது. நாள் முழுவதற்கும் தேவைப்படும் சக்தியும் பலமும் தரும் புரதம், வைட்டமின்கள், தாதுப்பொருட்கள், மாவுச்சத்து, ஆகிய முக்கிய இயற்கை ஊட்டச்சத்துக்கள் இதில் உள்ளன.

டாக்டர்கள் உலகெங்கும் ஹார்லிக்ஸை சிபாரிசு செய்வதில் வியப்பில்லை, இது குடும்பம் முழுவதற்குமே ஊட்டச்சத்து அளிக்கும் மூலாதாரமான பானம் என்று நிரூபிக்கப்பட்டது.



இல்லத்தரசிக்கு சக்தியூட்டும் பானம்.







**சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்**

HTA 5817 TAM

# நிலவே, செக்ஷன் 302 படி...

இந்தக் கதையைத் தொடர்ந்து படித்து வருபவர்களுக்கு ஆயிரம் ரூபாய் பரிசு பெறும் வாய்ப்பிருக்கிறது.



3

அலுவலகத்தில் அந்த கிறிஸ்துவப் பெண் டைப்படித்துக் கொண்டிருந்தாள்.

''எனக்கு ஒரு போன் வந்திச்சாமே?'' என்றாள் நிவிதா.

''ஆமாம். வினோத்குமார்னு சொன்னார். இந்தாங்க. இந்த நம்பருக்கு உங்களை போன் செய்யச் சொன்னார்.'' என்று அவள் துண்டுக் காகிதம் நீட்டின போது அவள் விரலில் 'எம்' என்று எழுதின மோதிரம் தெரிந்தது.

மேரியா, மரியாவா என்று வித்யா சாகர் கேட்டது நினைவு வந்தது.

''உங்க பேரென்ன?'' என்றாள்.

''மார்ட்டினா''

''நான் போன் பண்ணிக்கலாமா?''

அவள் பக்கமாக நகர்த்தி வைத்து, ''உக்கார்ந்து பேசுங்க'' என்று நாற்காலியைக் காட்டினாள். நிவிதா அமர்ந்து, அந்த எண்களைச் சுழற்றினாள்.

''மிஸ்டர் விநோத்குமார் இருக்காரா?''

''ஒரு நிமிஷம்.''

ஒரு நிமிஷத்திற்குள்ளேயே, ''விநோத் ஹியர்''

''நிவிதா பேசறேன்.''

''ஹல்லோ! மெட்ராஸ் வந்து பன்னிரண்டு மணி நேரமாச்சு. உன் கிட்டேர்ந்து தகவல் இல்லே. எப்ப வந்தே?''

''நான் கோபமா இருக்கேன்.''

''குரல்ல தெரியலே. முகத்தில இருக்கலாம். ஆனா எனக்கெப்படி தெரியும் அது? கோபம் ஏன்னு எனக்குத் தெரியும். மெட்ராஸ் வந்து நானே போன்ல காண்டாக்ட் பண்றேன்னு சொல்லியிருந்தே. நான் முந்திக்கிட்டதில கோபம். ரைட்?''

''என்ன அவசரம் உங்களுக்கு?''

''இன்னிக்கு குரல் தரிசனத்தோட சரியா? போன்லயேதானா? நேர்ல மீட் பண்ணப் போறதில்லையா?''

''இல்லே.''

''உதைப்பேன் படவா. பார்த்து இருபத்தி மூணு நாளாச்சி. இல்லையாம். நிஜமாவே மனசைத் தொட்டுச் சொல்லு பார்க்கலாம்.''

''எங்கேர்ந்து பேசறீங்க?''

— பட்டுக்கோட்டை பிரபாகர் —



''கம்பெனிலேர்ந்து பேசறேன். வரட்டுமா?''

''வேணும். வேணும்.''

''வர்றியா?''

''நாளைக்குப் பார்க்கலாமே.''

''ம்கூம். இன்னிக்கே. இப்பவே.''

''எங்கே வர்றது?''

''போனை வச்சிட்டு வெளில வா. ஒரு ஆட்டோல ஏறி உக்காரு. ஆனந்த் தியேட்டர்ன்னு சொல்லு. நாலே நிமிஷத்தில இறக்கி விடுவான். நீ இறங்கினதும் ஹலோ சொல்ல நான் ரெடியா இருப்பேன். ரைட்?''

''இப்பதான் ஆபீஸ்லேர்ந்து வந்தேன். முகம் கழுவிக்கிட்டு, டிரெஸ் மாத்திக்கிட்டு வர்றேனே... வெய்ட் பண்றீங்களா?''

''எனக்குத் தாடி வளர்றதுக்குள்ளே வந்துடு.''

வைத்துவிட்டு மார்ட்டினுவின் ஊடுறுவும் குறும்புப் பார்வையைத் தவிர்த்து தன் 72ம் நம்பர் அறைக்கு வந்தாள்.

காலேயில் அறிமுகமான அறைத் தோழிகள் இருவரில் டெலிபோன் எக்ஸ்சேஞ்சில் வேலை பார்க்கும் பத்மா கட்டிலில் படுத்துக் கொண்டு ஆங்கில சினிமா பத்திரிகை புரட்டிக் கொண்டிருந்தாள். சதர்ன் ரயில்வே அலுவலகத்தில் வேலை பார்க்கும் மற்றொருத்தி தாமரைச் செல்வி கண்ணாடி முன் அமர்ந்து புருவம் தீட்டிக் கொண்டிருந்தாள்.

''வாங்க நிவிதா, உங்களுக்காகத்தான் காத்திருக்கோம்.''

''எனக்காகவா? எதுக்கு?''

''எங்களும்ல சேர்த்திருக்கிங்க. சின்னதா பார்ட்டி இல்லையா? பத்மா, தாஜ் போலாமா, சோழா போலாமா?''

''பயமுறுத்தாதே அவங்களை. முதல் மாதச் சம்பளம் வாங்கினதும் சோழால வச்சிக்கலாம். இப்போ சிம்ப்பிளா கேக், சம்சா, ஐஸ்கிரீம். என்னங்க நிவிதா?''

''நிச்சயம் தர்றேன். ஆறு நாளைக்குத்

தர்றேன்.''

''இன்னிக்கு என்ன அஷ்டமியா?''

''இல்லே. நான் அவசரமா வெளில போக வேண்டியிருக்கு.''

''நான் சொல்லட்டுமா எங்கேன்னு?''

''நான் போற இடம் உங்களுக்கு எப்படித் தெரியும்?''

''தட் ஈஸ் பத்மா. சொல்லிட்டா என்ன தர்றீங்க? பணமெல்லாம் வேணாம். சிம்ப்பிளா ஒரு கிஸ். ஓக்கே? நீங்க போறது வினோத்குமாரை மீட் செய்ய. அறிவுப்போட்டி பதில் மாதிரி சொல்லுங்க. சரியா, தவறா?''

நிவிதா திகைத்துப் போனாள்.

''எ.... எப்படி உங்களுக்குத் தெரியும்?''

''துப்பறிஞ்சேன். மார்ட்டினா வினோத் குமார்ன்னு எழுதி ஒரு போன் நம்பர் எழுதி வச்சிருந்தா. புதுப் பேரா இருக்கேன்னு கேட்டேன். கால் உங்களுக்கு வந்ததுன்னு சொன்னா. ஆகவே இரண்டும், இரண்டும் நான்கு. கமான், கிஸ்'' என்று தன் கன்னத்தைக் காட்ட....

புன்னகையை விழுங்கிக் கொண்டு நிவிதா பத்மாவை முத்தமிட்டுவிட்டு துண்டுடன் பாத்ரூம் சென்றாள்.

முகம் கழுவித் திரும்பி வந்து கண்ணாடி முன்பு ஸ்டூலில் அமர...

''எப்படி இது? ஃப்ரெண்ட்ஷிப்பா, இல்லே....'' என்றாள் தா. செல்வி.

''சேச்சே. சின்சியரா நேசிக்கிறோம்.''

''உங்க காதலோட வயசு?''

''ரெண்டு வருஷம். ரெண்டு மாசம்.''

''இப்ப கேட்டா விவரமா சொல்ல மாட்டிங்க. போய்ட்டு வந்து ராத்திரி எப்படி ஆரம்பிச்சதுன்னு எனக்குச் சொல்லணும் நீங்க. சொல்விங்களா?'' என்றாள் பத்மா.

''சொல்றேன்'' என்று பவுடர் ஒற்றிக் கொண்டாள்.

''ஒரு புது மாதிரி ஹேர் ஸ்டைல் நான் செஞ்சி விடட்டுமா, இஃப் யு டோண்ட் மைண்ட்'' என்று உரிமையாகத் தாமரைச் செல்வி சீப்பெடுத்துக் கொண்டு நிவிதாவின் தலையலங்காரத்தில் இறங்கினாள்.

பதினைந்து நிமிடத்தில் சிவப்புச் சேலையில் புறப்பட்டாள் நிவிதா.

ஆட்டோ பிடித்து தியேட்டர் வாசலில் இறங்கின போது வினோத் குமாரைக் காணவில்லை. சற்று ஒதுங்கி நின்று சுற்றிலும் அலைமோதும் கூட்டத்தில் அவனைத் தேடினாள்.

''மேடம், சினிமா பார்க்கலாம் வர்றீங்களா மேடம்?'' என்று கட்டையாய் ஒரு குரல் அவள் காதருகில் விசாரிக்க.. ''ச்சீ'' என்று திரும்பினாள்.

வினோத் பாண்ட் பாக்கெட்டுகளில் கைகளை விட்டுக் கொண்டு பல் தெரியாமல் சிரிக்க...

''ச்சே... நீங்கதானா? பயந்தே போய்ட்டேன்.''

''என்னை மட்டும் இவ்வளவு நேரம் தவிக்க விடலாமா நீ? நான் கொஞ்சம் ட்ரிம்மா, ஜக்கா இருக்கேனா, ஒரு பொண்ணு வந்து இதே மாதிரி சார், சினிமா பார்க்க வர்றிங்களான்னு விசாரிச்சா. நிவிதாவை வரச் சொல்லிட்டேன், இல்லேன்னா வருவேன்னு சொல்லிட்டேன்.''

''வழியாதிங்க. உங்களைத் திட்டிட்டுப் போகத்தான் வந்தேன்.''

''இப்படி நடு ரோட்ல நின்னுதான் திட்டணும்னு அவசியம் இல்லே. பைக் இருக்கு. பின்னாடி உட்கார்ந்தா நேரா சாந்தோம் பீச்சுக்குப் போகலாம். அங்க போய் எவ்வளவு வேணும்னாலும் திட்டோ திட்டுன்னு திட்டு. கடல் சத்தத்தில காதுல விழாது. வா.''

சாலையோரமாக நிறுத்தி வைத்திருந்த மோட்டார் பைக்கை நோக்கி நடந்த வினோத் குமார் மீடியமான உயரத்தில் இருந்தான். கறுப்பு ஜேகர் பேண்ட் அணிந்து, லூசாய் முழங்கை வரைக்கும் பேகி ஷர்ட் அணிந்திருந்தான். போட்டோசென் கிளாஸ். தூக்கி வாரப்பட்ட முடி காற்றில் அதிர்ந்தது.

பீச் வந்து, மணலில் மௌனமாக நடந்து... அலைகளுக்கு அருகாமையில் அமர்ந்த பின், ''இப்ப திட்டு. கேட்டுக்கறேன்'' என்றான்.

''உங்களை யார் ஹாஸ்டலுக்கு போன் பண்ணச் சொன்னது?''

''உனக்கு போன் பண்றதுக்கு இன்னொருத்தர் எனக்குச் சொல்லணுமா?''

''வார்டன் ஒரு மாதிரி பார்க்கறாங்க. கிளார்க் ஒரு மாதிரி சிரிக்கிறா.''

''ஸோ வாட்?''

''உங்களுக்கென்ன, சுலபமா சொல்லிட்டிங்க. என் ரூம்மேட்சுக்குக் கூடத் தெரிஞ்சி போச்சு — வந்த முதல் நாளே.''

''என்னைக்கு இருந்தாலும் தெரியாமல்



மனைவி: டிரிங்னு வாசலில் சத்தம் கேட்டுதே... கதவைத் திறந்து போய்ப் பாருங்களேன்!

கணவன்: சும்மா இரு! எனக்குக் கடன் கொடுத்த ராமசாமிதான் என்னை வெளியில் வரவழைக்க அப்படி சத்திக்கிட்டிருக்கான்!

— உ. ராஜாஜி



போய்டுமா? இன்னிக்குத் தெரிஞ்சா என்ன?''

''என்ன நினைப்பாங்க என்னைப் பத்தி?''

''விவரமான ஆளுன்னு நினைப்பாங்க. கட்இட் நிவிதா. எப்படி இருக்கு ஆபீஸ்?''

''ரொம்ப விசாலம்.''

''என் மனசு மாதிரியா?''

'' ஆகா, உங்க மனசு தெரியாது எனக்கு?''

''என்ன நீ, மூணு வாரம் கழிச்சி மீட் பண்றோம். ஒரு ரொமாண்டிக் பார்வை வேணும்? பேச்சில ஏன் மொளகா பஜ்ஜி காரம்? ஈஸி நிவிதா ஈஸி.''

கூந்தல் பறக்க மௌனமாக முழங்கால் களைக் கட்டிக் கொண்டு அவனையே பார்த் தாள். பைக் சாவியால் மணலில் படம் வரைந்து கொண்டிருந்தவன் நிமிர்ந்து, ''என்ன பார்வையிலேயே இப்படி சாப் புடறே. கொஞ்சம் மிச்சம் வை. நான் வீட்டுக் குப் போகணும்'' என்றான்.

''வினோத்''

''ம்?''

''எப்படி இருக்கீங்க?''

'' அப்பா. இப்பத்தான் சாந்தலட்சுமி கடாட்சம் அருளியிருக்கு. கொஞ்சம் இளைச் சிப் போய்ட்டேன். இல்லே? போன வாரம் பசலை நோய் வந்து வாட்ச் கழண்டு கீழே விழுந்துடுச்சு.''

''அதெல்லாம் இல்லே. கொஞ்சம் பருத் துத்தான் இருக்கீங்க. லேசா தொப்பை ஃபார்ம் ஆகுது போலிருக்கு.''

''ரெண்டு வாரமா எக்ஸர்சைஸ் செய் யலை நிவிதா. டைட்டா வேலை.''

''உண்மை அது இல்லே.''

''பின்னே?''

''நிறைய பீர் குடிச்சா தொந்தி வரும்.''

''நிறையக் குடிச்சாதானே? நான் வாரத் துக்கு ரெண்டு தடவைக்கு மேல தொடற தில்லையே. அதுவும் பஸ்லேயும், ரயில்லயும் டூர் போக வேண்டிய வேலையாப் போச்சா? உடம்பு சூடாய்ட்டுது. அதனாலை...''

''சூடானா... எண்ணெய் தேய்ச்சுக் குளிக் கிறது.''

''உடனே பாட்டி வைத்தியம் ஆரம்பிச் சிடுவியே... அதுக்கெல்லாம் பொறுமை இல்லே நிவிதா. கல்யாணத்துக்கப்புறம் நீ தேய்ச்சுக் குளிப்பாட்டி விடறதானா, நான் தினம் ஆயில்பாத் எடுத்துக்கத் தயார். அது வரைக்கும்...''

''பீர் மட்டும்தானா, இல்லே இன்னும் ஏதாச்சும் உண்டா?''

''சேச்சே. வேற என்ன என்ன அயிட்டம் இருக்குன்னுகூட எனக்குத் தெரியாது. கை யைக் கொண்டாயேன்...'' என்று அவன் கையை எடுத்து அதை இரண்டு கைகளாலும் பொத்திக் கொண்டு, ''சத்தியமா'' என்றான்.

''நம்புறேன்'' என்று கையை எடுத்துக் கொள்ள முயல...

''கொஞ்ச நேரம் இருக்கட்டுமே. பத்தி ரமா வச்சிக்கிறேன் நான்'' என்று அவன் முகத்தைப் பார்த்து: ''வர்ற சண்டே என்ன ப்ரோக்ராம் நிவி?''

''ஒண்ணுமில்லே.''



காண்ட்ராக்டர்: ''வாட்ச்மேன்... இந்த இரும்புக் கம்பிகளையெல்லாம் பத்திர மாக எண்ணி வை. நீ வேலைக்குப் புதுசு இல்லையா?''

வாட்ச்மேன்: ''அந்தக் கவலையே உங்க ளுக்கு வேணாங்க. இதுக்கு முன்னால ஒரு வருஷமாக் கம்பிதாங்க எண்ணிக் கிட்டிருந்தேன்!''

— நல்லாலம் காசிதாசன்.

'' ஏன்?''

''இத பாருங்க வினோத்..''

''பார்த்துக்கிட்டே இருக்கேன்''

''நான் திருச்சில வேலை பார்த்தப்போ நாம மாசத்துக்கு எத்தனை தடவை சந்திப் போம்?''

''ரெண்டு தடவை. அதாவது நான் டூர்ல வர்ற ரெண்டு தடவையும்.''

'' அதே மாதிரி... இங்கேயும் மாசத்துக்கு ரெண்டு தடவைதான் நாம சந்திக்கப் போறோம்.''

''இது அநியாயம். இப்படி வச்சிக்கலாம். நான் மெட்ராஸ்ல இருக்கிற நாட்கள் மட்டும் நாம சந்திக்கிறோம். ஓக்கே?''

''டூர் தினங்கள் போக நீங்கள் மாசத்தில எத்தனை நாள் மெட்ராஸ்ல இருப்பீங்க?''

''ஜஸ்ட் பத்தே பத்து நாள்தான்.''

''ம்கூம். மாசம் ரெண்டு தடவைதான் பார்க்கணும். இதில நான் ரொம்ப ஸ்ட்ரிக்ட்டா இருக்கப் போறேன். தினம் பார்க்கணும்னு நினைச்சா... ஒரே வழி கல் யாணம்தான்!''

''நானா மாட்டேங்கறேன். இங்கேயே இருக்கியா? பொடி நடையா போய் ஒரு மஞ்சக் கயிறு வாங்கிட்டு வரட்டுமா?''

''என் தம்பிக்கு ஒரு நல்ல வேலை கிடைச்சு அவன் என் குடும்பத்தைக் காப்பாத்தற பொறுப்பை எடுத்துக்கற வரைக்கும் நான் காத்திருந்துதான் ஆகணும் வினோத்.''

''வேற வழியில்லாம நானும் காத்திருந்து தான் ஆக வேண்டியிருக்கு. கல்யாணத்துக்கு அப்புறமும் நீ வேலைக்குப் போகலாம், சம்ப ளம் முழுக்க உன் குடும்பத்துக்குத் தரலாம்னு நான் நூறு தடவை சொல்லிட்டேன். நீ கன்சிடர் பண்ணவே மாட்டேன்ற.''

''வேணாங்க வினோத். அதனால பின்னாடி பிரச்னைகள் வரும்.''

கொஞ்ச நேரம் இருவரும் அமைதியாக ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருக்க..

சற்றுத் தள்ளி தன் நண்பனுடன், சங்கிலி முனையில் நாயுடன் வந்து கொண்டிருந்த ஷியாம் அவர்களைப் பார்த்தான்.

''வாட் எ சர்ப்ரைஸ்! இப்ப நான் சொல் லிக்கிட்டிருந்தனே... அதோ பாரு... அவ தான் நிவிதா'' என்றான். நாக்கால் கீழுதட் டைத் துடைத்துக் கொண்டான் ஈரமாக.

— தொடரும்

# உயில்

தாம் சாசுவதமென்றுதான் அவருக்கு எண்ணம் என்று சங்கரன் ஏளனத்துடன் நினைத்துக் கொண்டான்.

அந்த இளமையான தோற்றம் ஒரு வேளை அவருக்குத் தம் வயதின் யதார்த்தத்தை மறைப்பதாயிருக்கலாம். எழுபத்திரண்டு வயதில் அண்ணாசாமிக்குத் தலை முடியின் அடர்த்தி குன்றவில்லை. சங்கரனுக்கு இந்த நாற்பத்தைந்தாவது வயதிலேயே லேசான பின் வழுக்கையை மறைக்க முடியை நாசூக்காய் வாரி வெற்றிடத்தின் மீது பரவ விட வேண்டிய நிர்ப்பந்தம். இது பற்றி அவனுக்குக் கிழவர் மேல் கொஞ்சம் மனத்தாங்கல் உண்டுதான். அழகிலோ, அறிவிலோ தன் மகன் தன்னை மிஞ்சினால் யாரும் பெருமைப் படலாம். இதே விஷயங்களில் தன் தந்தை தன்னை மிஞ்சினால் அது போல் ரசிக்க முடியுமா? தன் மீது அப்பா நிழல் கவிக்கிறார் என்றுதான் தோன்றுகிறது.

அண்ணாசாமிக்கு அடர்ந்த முடி மட்டும் இல்லை. நரை கூடக் குறைவுதான். சிறிது காலமாய்த்தான் கருங்கடல் முடி காதோரங்களில் நுரையைத் தள்ளியிருந்தது. எல்லாரோடும் கலகலப்பாய்ப் பேசும் சுபாவம். சிரிக்கும் போது பளீரென்று வெள்ளை வரிசையாய் மின்னும் அத்தனையும் நிஜப் பற்கள். இரண்டு பிள்ளைகளுக்குத் தகப்பன் போலவும் அரை டஜன் பேத்தி பேரன்களுக்குத் தாத்தா போலவுமா இருக்கிறார்? இது



நியாயமே இல்லை. இப்படி இருக்க இவருக்கு உரிமை கிடையாது. இது கீழ்க் கிளைகளுக்கு இவர் இழைக்கும் அநீதி.

ஒரு பல்வரிசையும் கருமுடியும் மூப்பை மறைத்து வைப்பதால் மூப்பு கொண்டு வருகிற மரண நினைவும் இல்லாமல் போகிறது போலும். மனைவி இறந்தாகி விட்டது. ஒரு சகோதரனை இழந்திருக்கிறார். இன்னும் ஒன்று இரண்டா பார்த்திருந்த மரணங்கள்! எனினும் மரணம் அவருக்கு நிஜப் பொருளாய் இல்லை. அவர் நண்பர்கள், உறவினர்களில் அவரை விட வயதில் இளைய சிலர் கூட உயில் எழுதி விட்டார்கள். ஆனால் யாரோ அவரிடம் ''உங்க உயிலோட டர்ம்ஸ் என்ன ஸார்? சொத்தெல்லாம் ரெண்டு பிள்ளைக்கும் சமபங்குதானே?'' என்று ஒரு சமயம் கேட்ட போது அண்ணாசாமி, ''நான் இன்னும் என் உயிலே எழுதலே. அதுக்கு என்ன அவசரம் இப்ப?'' என்று பதிலளித்தார்.

அன்றுதான் சங்கரனுக்குப் புரிந்தது. அப்பாவுக்கு ஒன்றும் சமீபத்தில் சாவதாய் உத்தேசம் இல்லை என்று.



ஆர். சூடாமணி

சிரித்துக் கொண்டான். அப்பா நீர்க்காயுசாய் இருக்கட்டும். சந்தோஷம்தான். ஆனால் இந்தக் கண்ணோட்டம் — உயிலெழுத என்ன அவசரம் என்று கேட்கும் மனப்பான்மை — மரணத்தின் யதார்த்தம் புரியாத குழந்தைத்தனமா அல்லது அந்த யதார்த்தத்தை ஒப்புக் கொள்ள மறுக்கும் கோழைத்தனமா?

''அப்பா, இந்தப் புஸ்தகம் நல்லாயிருக்கு. படிச்சுப் பாருங்க'' என்று ஒரு சமயம் சொன்னான். அவன் கொடுத்த நூலில் இருபது பக்கங்கள் படித்து விட்டு அண்ணாசாமி, ''என்னடா இது, எடுத்த எடுப்பில் ஒருத்தன் சாவறதைப் பன்னிப் பன்னி விவரிச்சிருக்குது! சுத்த போர். உற்சாகமா ஏதானும் புஸ்தகம் இருந்தாக் குடு'' என்று நூலைத் திருப்பித் தந்து விட்டார். சோகரசக் கதைகளே பிடிக்காது. தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் ஒரு பாத்திரம் சாவதைக் காட்டினால் ஏதாவது காரணம் சொல்லி எழுந்து போய் விடுவார்.

அப்படியானால், அப்பாவுக்கு மரணம் என்றால் பயம்தானா? இளந்தோற்றத்துக்குள்ளும் திட ஆரோக்கியத்துக்குள்ளும் புகுந்து கொண்டு மரணத்திடமிருந்து தப்பப் பார்க்கிறார்.

அந்தச் சனிக்கிழமை மாலை சங்கரனின் பத்து வயதுப் பையன் ரமேஷ் ''அப்பா, நாளைக்கு நாமெல்லாம் மகாபலிபுரம் போய்ட்டு வரலாம்ப்பா'' என்றான். அது நெடுநாளைய ஆசை அவனுக்கு. ரமேஷ் இன்னும் மகாபலிபுரம் போனதில்லை. அக்கா ராதா கல்லூரியுடன் போயிருக்கிறாள். சித்தப்பா பிள்ளை அரவிந்த் கூட ஒரு விடுமுறைக்கு மெட்ராஸ் வந்திருந்த போது தந்தையின் நண்பர்கள் குடும்பத்தோடு போயிருக்கிறான். போனதோடு இல்லாமல் ''எங்க பாம்பேலேர்ந்து எலிஃபென்டா கேவ்ஸ் போய்ப் பார்த்திருக்கேன், இப்ப இங்கே மகாபலிபுரம் பார்த்துட்டேன்'' என்று ரமேஷிடம் பெருமையடித்துக் கொண்டான். இவனை விட அவன் ஒரு வயது சின்னவன். இந்த அவமானம் சகிக்கக் கூடியதல்ல.

''போலாமாப்பா? சரின்னு சொல்லுப்பா'' என்றான் ரமேஷ். சங்கரன் ஏதும் சொல்லவில்லை. அலுவலகத்தில் ஆடிட் கணக்கு முடிந்த நேரம். சில நாட்களாய் வேலை பின்னி எடுத்து விட்டது. நாளை நிம்மதியாய் வீட்டில் ஓய்வெடுக்க விரும்பினான்.

''இந்த வாரம் வேணாம்டா, இன்னொரு சமயம் போகலாம்'' என்றான்.

''அப்பா, அப்பா, ப்ளீஸ்ப்பா, எனக்கு ரொம்ப ஆசையாயிருக்குப்பா. அரவிந்த் கூட மகாபலிபுரம் போய்ட்டு வந்துட்டான். பாம்பே பையன்! ரொம்ப பீத்திக்கறான். என்னை அழைச்சிட்டுப் போப்பா!''

சோபாவின் பின்புறமிருந்து தந்தையின் கழுத்தை இறுகக் கட்டிக் கொண்டு தொங்கி

# கவர்னரை மறந்த விழா!



அண்மையில் திருவனந்தபுரத்தில் தேசிய விளையாட்டுப் போட்டி நடந்தது. விளையாட்டுப் போட்டியை ஆரம்பித்து வைக்க ஜனாதிபதி வந்திருந்தார். விழாவிற்குக் கவர்னர் ராமச்சந்திரனையே அழைக்கவில்லை. மறந்து போனார்களாம்! விளையாட்டு அமைச்சர் நீலலோகிததாச நாடார் 'ஓடிப் போய்' கவர்னரை அழைத்து வருவதற்குள் விழா தொடங்கி விட்டது!

கவர்னர் கையில் அமைச்சர் திணித்த அழைப்பிதழில் 'ஒரு மணி நேரத்திற்கு முன்பாகவே தயவு செய்து உங்கள் இருக்கையில் வந்து அமர்ந்து கொள்ளுங்கள்' என்று குறிக்கப்பட்டு இருந்தது!

— சண்டேமிட்டேயிலிருந்து: 'சேலம் சக்தி'

யவாறும் தோள்களைப் பற்றி உலுக்கி, உசுப்பியவாறும் பேசினான் ரமேஷ்.

"டேய், டேய், கழுத்தை விடுடா. மூச்சு அடைக்குது! என் தோளை அப்படி உலுக்காதே. நோகுது... டேய் நிறுத்துடா, நோகுதுன்னு சொல்றேனில்ல?" என்று சங்கரன் அதட்டவும் அண்ணாசாமி, "விட்டுடு ரமேஷ், அப்பாவைத் தொந்தரவு செய்யாதே" என்றார்.

"அப்பா, அப்பா, அழைச்சிட்டுப் போப்பா. சரின்னு சொன்னாத்தான் விடுவேன்..."

அண்ணாசாமி எழுந்து வந்து அவன் கைகளின் பிணைப்பைப் பிரித்துக் கொண்டே, "இரு இரு ரமேஷ், என் மகனை நீ படுத்தறே இல்லே? நாளைக்கு உனக்கொரு மகன் பொறந்து உன்னை இப்படிப் படுத்தத்தான் போறான், நானும் அதைப் பார்க்கத்தான் போறேன்" என்று சிரித்துக் கொண்டே கூறிப் பேரனை நகர்த்தித் தம் பக்கம் இழுத்துக் கொண்டார்.

"அப்பாடா!" என்று நிமிர்ந்து உட்கார்ந்து கழுத்தைத் தடவிக் கொண்ட சங்கரனுக்குச் சிரிப்பு வந்தது. பத்து வயதுப் பேரன் வளர்ந்து பெரியவனாகித் தந்தையாகும் வரை கூடத் தாம் உயிரோடு இருப்போம் என்று அப்பாவுக்கு எவ்வளவு நிச்சயம்!"

"என்னை அழைச்சிட்டுப் போக மாட்டியாப்பா?" ரமேஷ் சிணுங்கினான்.

அண்ணாசாமி பேரன் முதுகைத் தடவிக் கொடுத்தார். "கவலைப்படாதேடா! நான் அழைச்சிட்டுப் போறேன் உன்னை நாளைக்கு. சரியா?"

அவர் ஸ்பரிசம் மிக மென்மையானது. பூவையும் குழந்தையையும் புத்தகத்தையும் தொடும் மிருதுவான தீண்டல்தான் எப்போதுமே. உண்மையாகவே ஒரு குழந்தையைத் தீண்டும் போதே விரல்கள் கொஞ்சும். அவர் சொற்களைக் கேட்கு முன்பே ரமேஷ் அவர் தடவலில் குளிர்ச்சியடைந்தான். "நிஜமாவா தாத்தா? ரொம்ப தாங்க்ஸ் தாத்தா!" என்று குதித்தான்.

"ஏம்பா, இன்னிக்குச் சனிக்கிழமை, ராத்திரி நீங்க சாப்பிட மாட்டீங்க. காலைல எழுந்திருக்கறப்பவே சோர்வாயிருக்கும். இவனை மகாபலிபுரம் அழைச்சிட்டுப் போய் அலைய முடியுமா?" என்று சங்கரன் கேட்டான்.

"இது அந்த நாள் கட்டைடா! உங்க மாதிரி அலுப்பு, களைப்பெல்லாம் எனக்குக் கிடையாது."

"இருக்கட்டும், இருக்கட்டும். நாளைக்குப் போய்ட்டு வந்து கால்வலி, ஸன்ஸ்ட்ரோக் அப்படின்னு ஏதாவது வரட்டும், அப்போ பேசிக்கறேன்."

"இனிமே நானும் பீத்திப்பேனே!" என்று ரமேஷ் குதித்தான்.

கால்வலி, ஸன்ஸ்ட்ரோக் எதுவும் வரவில்லை. கேவலம் ஒரு மூச்சிரைப்புக் கூட இல்லாமல் மறுநாள் அண்ணாசாமி மகாபலிபுரத்திலிருந்து பேரனுடன் திரும்பி வந்தார்.

"சங்கரா, எவ்வளவு ஜோராயிருந்துது தெரியுமா எல்லாம்? ரமேஷும் நானும் நல்லா அனுபவிச்சோம். நீதான் வராம போய்ட்டே, பாவம். உன் களைப்பு இப்ப எப்படிடா இருக்கு?" என்று அவர் விசாரித்த போது சங்கரனுக்கு ஆத்திரம் பீறி வந்தது.

"அப்பா, அர்ஜுனன் தபஸ் பார்த்தோம்ப்பா! தாத்தா அந்தக் கதையைச் சொன்னாரு. தாத்தா ரொம்ப நல்லாக் கதை சொல்றாருப்பா!" என்று ரமேஷ் பாராட்டினான்.

"தொப்பலாய் நனைஞ்சப்புறம் கூட உன் பிள்ளைக்கு அலைகளை விட்டுட்டு வர மனசில்லே போ!"

"கடல்லே நின்னா என்ன?"

"பின்னே? இவ்வளவு தூரம் போய்ட்டுக் கடல்ல நிக்காமலா வருவாங்க?" என்ற அண்ணாசாமி குனிந்து தரையைப் பார்த்து, "ரமேஷ், நாம நிக்கற இடத்திலேயே இன்னொரு கடற்கரை உருவாக்கிட்டோம், பார்த்தியா?" என்றார்.

"அட! இத்தனை மணலா நம்ம கால்கள்ல

ஒட்டியிருந்துது?"

"கால்கள்ல, துணிங்கள்ல, இன்னும் நம்ம தலைமுடியில கூட இருக்கும். வா, போய் நல்லா சுத்தம் பண்ணிக்கிட்டுத் துணி மாத்திக்கலாம்."

தாத்தாவும், பேரனும் ஒரே மாதிரி உற்சாகத் துள்ளலுடன் குளியலறைக்குப் போனார்கள்.

அப்பாவுக்கு எப்போதுமே கடலில் நின்று நனைவது பிடிக்கும் என்பதை சங்கரன் நினைத்துக்கொண்டான். குடும்பமாய் மெரீனா கடற்கரைக்குச் சென்றால் எல்லோருக்கும் முன்னால் வேகமாய் நடந்து சென்று சமுத்திரத்தில் போய்த்தான் நிற்பார். போன வாரம் கூட அப்படித்தான். பிறகு திரும்பி வந்து மகன், மருமகள், பேத்தி, பேரனுடன் மணலில் உட்கார்ந்து கொண்டார்.

"இன்னிக்கு அலையெல்லாம் உயர உயரமாய் வருதுடா! நாளை பௌர்ணமியில்ல? கடல்ல நிக்கறது ரொம்ப த்ரில்லிங்காயிருந்தது" என்றார் அண்ணாசாமி. தந்தையின் அனுமதி இல்லாததால் மெரீனாவில் ரமேஷ் தாத்தாவுடன் கடலுக்குப் போவதில்லை. (அந்தக் குறையைத்தான் மகாபலிபுரத்தில் தீர்த்துக் கொண்டிருக்கிறான் போல் இருக்கிறது.)

"ஏ, சங்கரா, அதோ வரிசை வரிசையா ஸ்கூட்டர்ல போறாங்களே, அவங்க போட்டிருக்கிற கலர் கலரான ஹெல்மெட்டெல்லாம் தூரத்திலேர்ந்து பார்க்கறப்ப சர்தார்ஜி டர்பன்கள் மாதிரியில்லே?" என்றார் அண்ணாசாமி.

சங்கரன் தொலைவில் பார்வையிட்டான். அப்பாவின் உவமை எவ்வளவு பொருத்தம்! அவர் பளிச்சென்று இப்படி ஏதாவது சொல்லும்போது கேட்க நன்றாக இருக்கும். தொலைக்காட்சியில் வங்காளக் கதைகளில் வரும் வங்கத்துப் பெண்களின் கண்களை "சாப்பிடற மீனெல்லாம் நேரே கண்ணுக்குள் போயிடறாப்பல அப்படி ஒரு கண்ணழகுடா" என்று வர்ணிப்பார். அப்பாவுக்குள் எங்கோ ஒரு கலைஞன் ஒளிந்திருக்கிறான்.

பிறரை ரசிக்கவும் அவருக்குத் தெரியும். மெரீனாவில் அன்று முழுநிலவைப் பேரக் குழந்தைகளுக்குக் காட்டி, "அதில் இருக்கிற நிழல் என்ன தெரியுமா?" என்று கேட்டார்.

மான், முயல் என்று சிரிப்பிடையே பதில்கள். பேத்தி ராதா சந்திரனின் பௌதிக அமைப்பை விளக்கலானாள். சில பக்தர்களின் கற்பனைகளை மருமகள் சொன்னாள். திடீரென்று ரமேஷ், "அது நீல் ஆர்ம்ஸ்ட்ராங் நிக்கற நிழல் தாத்தா!" என்று கூவினான்.

அண்ணாசாமி பேரனைக்கட்டிக்கொண்டுவிட்டார். "சபாஷ்டா பயலே, சபாஷ்! நீ சரியான விஞ்ஞான யுகத்துப் பையன்தான்" என்று அவன் முகத்தை விரல்களால் கொஞ்சி அவனுக்குப் பிடித்த குல்ஃபி ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுத்தார்.

சங்கரன் அப்பாவின் ரசிப்பைரசித்தான். ஆனால் அந்த மனநிலை காரில் வீடு திரும்பும்போது சிதைந்து விட்டது. சாலையில் ஒரு மரண ஊர்வலம். வாசனைப் புகை காற்றில் வந்தது. அது மூக்கில் நுழைந்து விடாமல் அண்ணாசாமி முகத்தைத் திருப்பிக் கொண்டார். கார் சாலையைக் கடக்கும் வரை முகம் திரும்பியே இருந்தது.

மரணத்தை என்ன, தொற்று நோய் என்று எண்ணிக் கொண்டாரா? அந்த வாசனையிலிருந்தே தப்பி விலகுகிறாரே!

மீண்டும் அவனுள் இகழ்ச்சி எழுந்தது. வீட்டை அடைந்ததும் காரை நிறுத்தி இறங்கி உள்ளே செல்ல ஆரம்பித்தான். அப்பாவுக்காகக் கார் கதவைத் திறந்து பிடித்துக் கொண்டு அவர் இறங்கிய பிறகே அவன் வீட்டினுள் செல்லும் வழக்கம் இன்று மறந்து விட்டதா என்ன?

"மாமாவுக்குக் கதவு திறந்து விடாமலே போறீங்களே?" என்று மனைவி நினைவுறுத்தினாள்.

சங்கரன் சூள் கொட்டி, "எல்லாம் தானே திறந்துக்கிட்டு வரட்டும்" என்றான் அசிரத்தையுடன்.

**பா**ர்த்திருந்த மரண ஊர்வலங்கள் அனைத்தும் ஒருங்கே நினைவுக்கு வருவது போன்ற வேதனையில் அந்தக் கரிய நாட்கள் கடந்தன. ஒரு வாரமாக ரமேஷ் ஆஸ்பத்திரியில் கண் திறக்காமல் கிடந்தான். ஸ்கூல் பஸ் மீது பல்லவன் ஒன்று மோத, விபத்தில் ஒன்பது குழந்தைகளுக்கு லேசான காயம். ரமேஷ் உட்பட நால்வருக்குக் கவலைக்கிடமான ஆழ்ந்த காயங்கள்.

அண்ணாசாமி ஆஸ்பத்திரியிலேயே இருந்தார். இரவு பகல் பாராமல் பேரன் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தார். "வீட்டுக்குப் போய்க் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கிட்டு வாங்கப்பா" என்று சங்கரன் சொன்னதைக் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை. தில்லி ஐ. ஐ. டி. யிலிருந்து தம்பியைப் பார்க்கக் கவலையுடன் வந்திருந்த பெரிய பேரன், "ராத்திரி ரமேஷ் கூட நான் இருக்கேன் தாத்தா, நீங்க வீட்டுக்குப் போய்க் கொஞ்சம் தூங்கிட்டுக் காலேல வாங்க" என்றபோது ஓர் இயந்திரப் புன்னகையுடன் அவனைப் பார்த்துவிட்டுக் கண்களை மீண்டும் ரமேஷுக்கு அர்ப்பணித்தார். இடத்தை



"என் மூத்த பெண்ணுக்கு ஏழு வருஷ சர்வீஸ், பையனுக்கு ஐந்து வருஷ சர்வீஸ், கடைசிப் பெண்ணுக்கு மூன்று வருஷ சர்வீஸ்."

"எதிலே?"

"வேலை தேடறதிலே!"

—ட்டி. பிரின்ஸ் கதாகர்.



மந்திரி: ''கூட்டத்தில் பந்தோபஸ்து ஏற்பாடெல்லாம் சரியாச் செய்திருக்கா?''

பி.ஏ.: பயமே தேவையில்லை சார். ''மப்டி போலீசைத் தவிர கூட்டத்தில் யாருமே இல்லே!''

— என். வி. ரமணி.

விட்டு நகரவில்லை. மருமகள் வற்புறுத்திக் கொடுக்கும் உணவை நாவு உணரவில்லை.

புன்னகையில் அதே சீரான, நிஜமான வெள்ளைப் பற்கள். தலையில் வயதை மீறிப் பளபளக்கும் கறுப்பு அடர்த்தி. ஆனால் உள்ளுக்குள் கணத்துக்குக் கணம் ஒரு மூப்பு நிகழ்ந்து கொண்டிருந்ததைப் போல் கண்களின் ஆழத்தில் ஒரு சோர்வு. தமக்கு அடுத்த தலைமுறைக்கும் அடுத்த தலைமுறை. மரணத்தின் நிழலில் கிடக்கையில் முதுகுத் தண்டின் வளைவில் ஒரு தொய்வு. பாசத்தினால் பயந்து பயந்து தூக்கிப் போடும் உடம்பின் நடுக்கத்தில் ஒரு பரிதவிப்பு.

பகலிரவு பாராமல் அண்ணாசாமி அப்படியே உட்கார்ந்திருந்தார்.

**மா**லை வேலையிலிருந்து திரும்பிய சங்கரன் களைப்புடன் உட்கார்ந்து ஜோடுகளைக் கழற்றினான். மனைவி சிற்றுண்டி எடுத்து வந்து வைத்தாள்.

அப்ப்...பா, என்ன புழுக்கம், என்ன வேர்வை!''

''போய் முகம் கழுவி டிரெஸ் மாத்திக்கிட்டு வந்து சாப்பிடுங்க. ஃப்ரெஷ்ஷா யிருக்கும்.''

''முகுந்த் கிட்டேயிருந்து லெட்டர் வந்துதா? டில்லி போய்ச் சேர்ந்ததுமே போடறேன்னானே?''

''பகல் போஸ்ட்ல வந்துது.''

சங்கரன் எழுந்து பக்கத்து அறைக்குச் சென்றான். கட்டிலில் தலையணைமேல் கிடந்த சுருட்டைத் தலையைத் தடவிக் கொடுத்தான். ''எப்படிடா இருக்கே கண்ணா இன்னிக்கு?''

''எனக்கொண்ணும் இல்லேப்பா இப்போ. ஸ்கூலுக்கு எப்ப போறதாம்?'' என்று ரமேஷ் சிணுங்கினான்.

''போகலாம், போகலாம். இன்னும் கால்ல ஒரு காயம் மட்டும் பெரிசா இருக்கில்ல? அது சரியானப்புறம் அடுத்த டர்ம்லேருந்து மறுபடியும் ஸ்கூலுக்குப் போகலாம்.

''டாக்டர் கூட அப்படித்தானேடா சொல்லியிருக்கார் ரமேஷ் கண்ணா?'' என்றார் கட்டிலருகில் சாய்வு நாற்காலியில் பிரித்த புத்தகத்தோடு உட்கார்ந்திருந்த அண்ணாசாமி. பேரனை எவ்வளவு நேரம் பார்த்தாலும் போதவில்லை என்பது போலப் பார்த்துக் கொண்டே இருந்தார். சங்கரன் அறையை விட்டுச் சென்றான்.

''இந்தக் கதை பிடிக்கலே தாத்தா. அடுத்த கதை படியுங்க'' என்று பேரன் கட்டளையிடவும் அண்ணாசாமி புத்தகத்தை மெல்ல இரு கைகளில் ஏந்தி முகத்துக்கெதிரே தூக்கி ஓரத்தை ஊதிப் பிரித்துப் பக்கத்தை மிருதுவாகத் திருப்பினார்.

முகம் கழுவிக் கொண்டு முன் அறைக்குத் திரும்பி வந்த சங்கரன் திருப்தியாய்ச் சிற்றுண்டி உண்ணத் தொடங்கிய போது வாசற் கதவு மணி ஒலித்தது. எழுந்து சென்று கதவைத் திறந்தான். ஐம்பது வயது மதிக்கத் தக்க ஒருவர் நின்றிருந்தார்.

''மிஸ்டர் அண்ணாசாமி வீடு இது தானே?''

''ஆமாம், நீங்க...''

''என் பேர் கிருஷ்ணமூர்த்தி. அவர் நண்பர் வைத்தியநாதனோட ஸன். மிஸ்டர் அண்ணாசாமி நேத்து எங்க வீட்டுக்கு வந்திருந்தார். ஒரு வக்கீலைப் பார்க்கணும்னு சொன்னார். நான் வக்கீல்தான். என் அப்பா என்னை அறிமுகம் செஞ்சு வச்சார். இன்னிக்குச் சாயங்காலம் இங்கே வந்து தன்னைப் பார்க்கும்படி மிஸ்டர் அண்ணாசாமி என்கிட்டச் சொல்லியிருந்தார்.''

''நான் அவர் மகன்தான். உள்ளே வாங்க.''

''தாங்க் யூ.''

''எங்கப்பா... எங்கப்பா எதுக்காக வக்கீல் வேணும்னார்?''

''ஏதோ உயில் எழுதணும்னாரே? உங்களுக்குத் தெரியாதா?''

சங்கரன் அசைவிழந்து போனான். ரமேஷின் அறைக்குள்ளிருந்து அண்ணாசாமி வெளிப்பட்டார்.

''யாரு, கிருஷ்ணமூர்த்திதானே? வாப்பா. மாடிக்குப் போவோமா?''

சங்கரன் திரும்பித் தன் தந்தையைப் பார்த்தான். அப்பா கடைசியாய்த் தம் உயிலை எழுதவா தீர்மானித்திருக்கிறார்? ஏன்? எப்படி? கோழை அப்பா...

ஆனால் இது நிதர்சனம். அவர் அழைத்ததன் பேரில் வக்கீல் இதோ வீட்டுக்குள் வந்து எதிரே நிற்கிறார்.

அப்பா...!

இந்தக் காட்சி மகத்தானது. தன் உயிலை எழுதத் தயாராகும் மனிதன், மரணத்தை எதிர்கொள்ளத் தயாரானவன். மரணத்தை ஏற்கத் தயாராகிவிட்டவனின் வலிமையும் தைரியமும் சாதாரணமானவையல்ல. அவனை அதன்பின் உலகின் எந்த ஆற்றலும் அசைக்க முடியாது. அவன் ஏதோ ஓர் எல்லையைக் கடந்து அப்பால் போய்விட்டவன். பிறரினின்று மாறுபட்ட வேறொரு பரிமாணத்தில் இருப்பவன். அந்த நிலையில் அவன் அளவை எட்ட முடியாமல் மற்றவர்கள் சின்னவர்களாய் நிற்க வேண்டியதுதான்.

சங்கரன் புதிதாக ஒரு பயமும் மரியாதையும் கலந்த உணர்வுடன் தந்தையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அண்ணாசாமி வக்கீலுடன் மாடிப்படி ஏறினார்.

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி..



## அத்தியாயம் 45

## சிறைக் கப்பல்

கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் 'யானை இறவு' என்னும் கடல் துறை பின்னுக்குச் சென்றது. பின்னர் கானகத்து மரங்கள் பின்னோக்கி ஓடின. வானத்துப் பறவைகள் பின்னோக்கிப் பறந்தன. ஓடைகள், குளங்கள், ஊர்ப்புறங்கள், கோயில்கள் மண்டபங்கள் எல்லாம் பின்னோக்கிப் பாய்ந்து மறைந்தன. மான் கூட்டம் ஒன்று அந்த யானையுடன் சிறிது தூரம் போட்டியிட்டு ஓடப் பார்த்தது. மான்களும் தோல்வியடைந்து பின் தங்கின. யானை மட்டும் முன்னால் முன்னால் போய்க் கொண்டிருந்தது. எத்தனை தூரம் எத்தனை நேரம் என்றெல்லாம் பூங்குழலிக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆனால் இன்னமும் ஈழ நாட்டிலேதான் இந்த யானை போய்க் கொண்டிருக்கிறதா என்று மட்டும் பூங்குழலிக்கு வியப்பாயிருந்தது. இத்தனை நேரம் அந்தத் தீவை மூன்று தடவை கடந்து போயிருக்கலாமே, இல்லை, இல்லை! இந்த யானை ஈழ நாட்டைக் கடந்து செல்லவில்லை. பூலோகத்தைக் கடந்து போய்க் கொண்டிருந்தது. பூலோகத்தின் தென் முனையிலிருந்து வட முனைக்குப் போய்க் கொண்டிருக்கிறது! இதன் முதுகில் ஏறிக் கொண்டு நானும் பூமியைப் பிரதட்சணம் செய்கிறேன். நான் மட்டுமா? இளவரசருந்தான்!

முதலில், யானை மதம் பிடித்து ஓடத் தொடங்கியதும், பூங்குழலிக்குக் கொஞ்சம் பயமாய்த்தானிருந்தது. பயத்துடன், என்ன நிகழ்கின்றது என்று தெரியாத தயக்கமும் இருந்தது. இரண்டு மூன்று தடவை இளவரசர் அவளைத் திரும்பிப் பார்த்துப் புன்னகை புரிந்தார். பின்னர் அவளுடைய பயமும் தயக்கமும் மறைந்தன. எல்லையற்ற உற்சாகம் அவளை ஆட்கொண்டது. கொஞ்ச நேரம் வரை இப்பூவுலகில் ஒரு மத்தகஜத்தின் மீது ஏறிச் சென்றாள். திடீரென்று எப்படியோ சொர்க்கத்துக்குப் போய்விட்டாள். சொர்க்கத்தில் தேவேந்திரனுடைய ஐராவதத்தின் பேரில் அவள் வீற்றிருந்தாள். ஐராவதம் வான வீதிகளில் ஊர்வலம் போய்க் கொண்டிருக்கிறது. கற்பக விருட்சங்கள் அவள் மீது சுகந்த மலர்களைப் பொழிந்தன. கந்தர்வர்கள் இன்னிசைக் கருவிகளிலிருந்து இனிய சுவரங்களை எழுப்பிக் கொண்டு அவள் பின்னோடு பறந்து வந்தார்கள். அப்ஸர ஸ்திரீகள் நடனமாடிக் கொண்டு வந்தார்கள். ஊர்வலம் சென்ற வான வீதியின் இருபுறமும் நட்சத்திர தீபங்கள் சுடர்விட்டு ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்தன! இப்படிப் பல பல பல யுகங்கள் சென்றன!

இதோ, ஐராவதத்தின் வேகம் குறைகிறது. திடீரென்று அது பூலோகத்துக்கு வந்துவிட்டது. ஈழ நாட்டின் காடுகளுக்கே வந்துவிட்டது. யானைப் பாகன் குனிந்து அதன் மத்தகத்தைத்

தட்டிக் கொடுக்கிறான். அதன் காதண்டை ஏதோ சொல்கிறான்.— சேச்சே! அவன் யானைப்பாகன் அல்ல; தேவேந்திரன் அல்லவா?— இல்லை; இளவரசர் அல்லவா இவர்?

நாலுபுறமும் மரங்கள் சூழ்ந்த ஒரு குளத்தின் கரையிலே வந்து யானை அமைதியாக நின்றது.

பூங்குழலி சிறிது கவலையுடன், இளவரசரை வரவேற்றுஉபசரிப்பதற்காக ஜனக்கூட்டம் வந்து அக்கரையில் நிற்கிறதோ என்றுபார்த்தாள். இல்லை! பின்னால் குதிரைகள் தொடர்ந்து வருகின்றனவோ என்று பார்த்தாள். அதுவும் இல்லை! குளத்தைப் பார்த்தாள். அதில் பூத்திருந்த அல்லிமலர்களும் செங்கழுநீர்ப்பூக்களும் அப்படி அப்படியே கொடிகளுடன் பியத்துக் கொண்டு வந்தன. அவளை நாலுபுறமும் சூழ்ந்து கொண்டன. கன்னங்களிலும் தோள்களிலும் உடம்பு முழுவதும் அந்த மலர்கள் அவளைத் தழுவிக் கொண்டு மகிழ்ந்தன. பின்னர் அப்பொல்லாத மலர்களின் கொடிகள் அவளை இறுக்கிப் பிடித்து அமுக்கி மூச்சுத் திணறச் செய்தன. உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கி அப்பூங்கொடிகளின் பிடியிலிருந்து அவள் திமிறினாள். அப்படித் திமிறிய உடனே வானுலகிலிருந்து பூமிக்குத் தலைகீழாய் வந்தது போலிருந்தது. யானை தன் பெரிய முன்னங்கால்களை மடித்துக் குனிந்தது. பிறகு பின்னங்கால்களையும் மடித்துக் கொண்டு தரையில் படுத்தது. இளவரசர் யானையின் கழுத்திலிருந்து கீழே குதித்தார். "பூங்குழலி! யானை மேலிருந்து இறங்குவதற்கு மனம் இல்லையா?" என்றார்.



பூங்குழலி உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு தன் நினைவை அடைந்தாள். "ஐயா! சொர்க்கத்திலிருந்து பூமிக்கு வருவது கஷ்டந்தானே?" என்று முணுமுணுத்துக் கொண்டு இறங்கினாள்.

யானை மீண்டும் எழுந்து குளக்கரையிலிருந்த ஒரு பெரிய மரத்தின் கிளையை ஒடித்துத் தன் அகண்ட வாய்க்குள்ளே திணித்துக் கொண்டது.

அருள்மொழிவர்மர் குளத்தின் கரையோரமாகச் சென்று உட்கார்ந்தார். தயங்கி நின்ற பூங்குழலியையும் அருகில் வந்து உட்காரச் சொன்னார்.

தெளிந்த நீரில் பூங்குழலியின் முகம் பிரதிபலித்தது. யானையின் ஓட்டத்தினாலும் அச்சமயம் நேர்ந்த உள்ளக் கிளர்ச்சியினாலும் அவள் முகம் செக்கச் செவேலென்று ஆகிச் செங்கழுநீர்ப் பூவுடன் போட்டியிட்டது.

நீரில் தெரிந்த அவள் முகத்தைப் பார்த்த வண்ணம் இளவரசர் "சமுத்திரகுமாரி! உன்னை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது!" என்றார்.

அல்லிமலர்களும் செங்கழுநீர்ப் பூக்களும் மீண்டும் இடம்பெயர்ந்து வந்து பூங்குழலியின் உடல் முழுதும் முத்தமிட்டன!

"உன்னை ஏன் எனக்குப் பிடித்திருக்கிறது தெரியுமா?" என்று இளவரசர் கேட்டார்.

பூங்குழலியின் கண் முன்னால் வானமும் வையமும் குளமும் அதிலுள்ள மலர்களும் குளக்கரையிலிருந்த மரங்களும் சுழன்று சுழன்று வந்தன.

"எனக்குத் தெரிந்த ஒவ்வொருவரும் நான் அவர்கள் இஷ்டம் போல் நடக்க வேண்டும் என்றுஆசைப்படுகிறார்கள். நீ ஒருத்தி மட்டும் என் விருப்பத்தின்படி நடக்கச் சந்தோஷத்துடன் சம்மதித்தாய்! இந்த உத

வியை என்றும் மறக்க மாட்டேன், சமுத்திர குமாரி!''

பூங்குழலியின் உடம்பு ஒரு யாழ் ஆயிற்று. அவளுடைய நரம்புகள் எல்லாம் அந்த யாழின் நரம்புகள் ஆயின. பொன் வண்ண விரல்கள் அந்த நரம்புகளை மீட்டித் தேவகானத்திலும் இனிய இசையை எழுப்பின.

''சேநாதிபதியும் பார்த்திபேந்திரனும் சேர்ந்து என் பிரயாணத்தைத் தடை செய்வதற்குச் சூழ்ச்சி செய்தார்கள்! சேநாதிபதி நாம்வரும்வழியில் பல இடையூறுகளை உண்டு பண்ணினர். நமக்கு முன் அவசரமாக ஆள் அனுப்பிக்கிராமவாசிகளை உபசாரம் நடத்துவதற்கு ஏற்பாடு செய்தார். பார்த்திபேந்திரர் விரைந்து திரிகோணமலைக்குப் போயிருக்கிறார். அங்கிருந்து கப்பல் ஏறி நமக்கு முன்னால் தொண்டைமானாற்றின் முகத்துவாரத்துக்குவந்து விட வேண்டுமென்பது அவருடைய உத்தேசம். ஆகா! அவர்களுடைய சூழ்ச்சி எனக்குத் தெரியாது என்று நினைத்தார்கள்! உன் உதவியினால் அவர்களுடைய சூழ்ச்சியைத் தோற்கடித்தேன்...''

பூங்குழலிக்குச் சட்டென்று தான் செய்த காரியம் என்னவென்பது நினைவு வந்தது. அவளை நரகலோகத்தில் யமதூதர்கள் உயிரோடு செக்கிலே போட்டு ஆட்டுவது போலிருந்தது.

''ஐயா! அவர்கள் எல்லாரும் தங்களை எதிரிகளிடம் சிறைப்படாமல் தப்புவிக்க முயன்றார்கள். நான் பாவி! தங்களைச் சிறைப்படுத்த அழைத்துப்போகிறேன்!'' என்று கூறிவிட்டு விம்மினாள் பூங்குழலி.

''அடேடே! இது என்ன? உன்னைப் பற்றி நான் எவ்வளவோ நல்ல அபிப்பிராயம் கொண்டிருந்தேன். நீயும் அவர்களைப் போல் ஆகிவிட்டாயே!''

''என் சுயபுத்தியினால் இந்தப் பாதகத்தை நான் செய்யவில்லை. தங்களுடைய ஆசை வார்த்தையில் மயங்கிப் பைத்தியமாகி விட்டேன். இப்போது புத்தி தெளிந்தது. நான் போகிறேன்......'' என்று சொல்லிவிட்டுப் பூங்குழலி குதித்து எழுந்தாள்.

அவள் ஓடிப் போகாமல் தடுப்பதற்கு இளவரசர் அவளுடைய கரத்தை இலேசாகத் தொட்டுப் பற்றினார்.



அச்சமயத்தில் தேவலோகத்துக் கன்னிகைகளுக்கு வேறு வேலை இருக்கவில்லை. அவர்கள் வெண்ணிலவின் சாற்றைச் சந்தனக் குழம்புடன் கலந்து பூங்குழலியின் மீது தெளித்தார்கள்.

அவள் முற்றும் சக்தி இழந்து, செயலிழந்து, மீண்டும் கீழே உட்கார்ந்தாள். இரண்டு கரங்களினாலும் முகத்தை மூடிக்கொண்டு விம்மத் தொடங்கினாள்.

''சமுத்திரகுமாரி! உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் சொல்ல எண்ணினேன். நீ இப்படி அழுவதாயிருந்தால் சொல்வதற்கில்லை. உடனே புறப்பட வேண்டியதுதான்.''

பூங்குழலி கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அவரை நிமிர்ந்து பார்த்தாள்.

''அதுதான் சரி; கேள்! இவர்கள் எல்லாரும் என்னைச் சிறைப்படாமல் காப்பாற்ற முயல்கிறார்கள் என்று சொன்னாயே? அது உண்மைதான். அது எதற்காகத் தெரியுமா?''

''தங்கள் பேரில் அவர்கள் வைத்திருக்கும் அன்பினால்தான். நான் ஒருத்தி மட்டுந்தான் பாதகி!......''

''பொறு, பொறு! என் பேரில் எல்லாருக்கும் அன்புதான்! எதற்காகத் தெரியுமா? யாரோ ஜோசியர்களும் ரேகை சாஸ்திரிகளும் சொல்லியிருக்கிறார்களாம், — நான் ஒரு காலத்தில் சக்கரவர்த்தி ஆகப் போகிறேன் என்று. ஆகையால் ஒவ்வொருவரும் என்னைச் சிம்மாசனத்திலே தூக்கி வைத்து என் தலையிலே ஒரு கிரீடத்தையும் சுமத்தி விடப் பார்க்கிறார்



கள். பேராசை பிடித்தவர்கள்!''

''ஐயா! அவர்கள் அப்படி ஆசைப் பட்டால் அதில் தவறு என்ன? இந்த லோகத்துக்கு மட்டுந்தானா, மூன்று உலகத்துக்கும் சக்கரவர்த்தியாகத் தாங்கள் தகுதி வாய்ந்தவர் அல்லவா?''

''ஆகா! நீயும் அவர்களைப் போலத் தான் பேசுகிறாய்! பெண்ணே! இவ்வுலகில் அரண்மனையைப் போன்ற சிறைக் கூடம் வேறில்லை; சிம்மாசனத்தைப் போன்ற பலிபீடமும் இல்லை; கிரீடம் அணிவது போன்ற தண்டனை வேறு இடையவே கிடையாது. இதையெல்லாம் மற்றவர்களிடம் சொன்னால் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்; நீயாவது ஒப்புக் கொள்ளுவாய் என்று நினைத்தேன்.''

பூங்குழலியின் கண்ணிமைகள் பட்டுப் பூச்சியின் சிறகுகளைப் போல் அடித்துக் கொண்டன. அவள் ஆர்வம் ததும்பிய அகன்ற கண்களினால் அரசிளங்குமாரரை நோக்கினாள்.

''சமுத்திரகுமாரி! உண்மையாகச் சொல்! உன்னை வாழ்நாளெல்லாம் ஒரு சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும்படி சொன்னால் உட்கார்ந்திருப்பாயா?'' என்று இளவரசர் கேட்டார்.

பூங்குழலி சிறிது நேரம் யோசனை செய்தாள். பின்னர், ''மாட்டேன்!'' என்று தெளிவாகச் சொன்னாள்.

''பார்த்தாயா? பின்னே என்னை மட்டும் அந்தத் தண்டனைக்கு ஏன் உள்ளாக்க விரும்புகிறாய்?''

''தாங்கள் இராஜ குலத்தில் பிறந்தவர் அல்லவா?''

''இராஜ குலத்தில் பிறந்ததினால் என்ன? நல்ல வேளையாகக் கடவுள் என்னை அந்தத் தண்டனைக்கு உள்ளாக்க விரும்பவில்லை. இராஜ்யம் ஆளுவதற்கு என் மூத்த சகோதரர் இருக்கிறார்; என் பெரிய பாட்டனாரின் மகன் ஒருவரும் இருக்கிறார். அவரும் இராஜ்யம் ஆள ஆசைப்படுகிறார்......''

''ஆகா! அது தங்கள் காதுக்கும் எட்டி விட்டதா?'' என்றாள் பூங்குழலி.

''நல்ல கதை! எனக்குத் தெரியாது என்று நினைத்தாயா, என்ன? ஆகையால் தஞ்சாவூர் சிம்மாசனம் அதன் பேரில் உட்காருவதற்கு ஆள் இல்லாமல் தவிக்கப்போவதில்லை. அத்துடன் எனக்குக் கிரீடம் சுமந்து இராஜ்யம் ஆளும் ஆசையும் இல்லை!...''

''தங்களுக்கு எதிலேதான் ஆசை?'' என்று கேட்டாள் பூங்குழலி.

''அப்படிக் கேள், சொல்லுகிறேன்! சற்றுமுன் இந்த மத்தகஜத்தின் மீது உட்கார்ந்து பிரயாணம் செய்தோமே? அம்மாதிரி வனங்கள் வனாந்தரங்கள் எல்லாம் புகுந்து சண்டமாருதம் போல் சுற்றி வருவதில் எனக்கு ஆசை. கப்பல்களில் ஏறிக் கடல்களைக் கடந்து செல்வதில் ஆசை. உயரமான மலைகளின் உச்சிச் சிகரங்களின் மேல் ஏறுவதில் ஆசை. கடல்களுக்கு அப்பால் இந்த இலங்கையைப் போல் எத்தனையோ இலங்கைகளும் பரதகண்டத்தைப் போல் எத்தனையோ பெரிய பெரிய கண்டங்களும் உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அங்கேயெல்லாம் போய் அந்தந்த நாடுகளில் உள்ள அதிசயங்களைப் பார்க்க வேண்டும் என்று ஆசை!...''

இளவரசர் கூறும் மொழிகளை அப்படியே விழுங்குவாள் போல் பூங்குழலி வாயைத் திறந்தபடி கேட்டுக் கொண்டிருந்தாள். ஆர்வம் கட்டுக்கடங்காமல் போகவே, ''ஐயா! அங்கேயெல்லாம் போகும்போது என்னையும் அழைத்துப் போவீர்களா?'' என்று கேட்டாள்.

''நான் சொன்னவையெல்லாம் என் ஆசைகள். அவை நிறைவேறப் போகின்றன என்று யார் கண்

டது?'' என்றார் இளவரசர்.

பூங்குழலி கனவு லோகத்திலிருந்து பூலோகத்துக்கு வந்தாள். ''ஐயா! அப்படியானால் தாங்கள் எதற்காக இப்போது தஞ்சாவூருக்குப் போக வேண்டும்?'' என்றாள்.

''அதைச் சொல்லத்தான் ஆரம்பித்தேன். அதற்குள் நீ பேச்சை மாற்றி எங்கேயோ கொண்டு போய் விட்டாய். சமுத்திர குமாரி! இந்த இலங்கைத்தீவில் வாய்திறந்து பேசும் சக்தியற்ற ஊமை ஸ்திரீ ஒருத்தி அங்குமிங்கும் சித்தப்பிரமை கொண்டவள் போல் சுற்றிக் கொண்டிருக்கிறாளே? அவளை உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார் இளவரசர் அருள்மொழி வர்மர்.



பூங்குழலி அடங்கா வியப்புடன் ''தெரியும், இளவரசே! எதற்காகக் கேட்கிறீர்கள்?'' என்றாள்.

''காரணம் பிறகு சொல்லுகிறேன். அந்த ஸ்திரீயை உனக்கு எப்படித் தெரியும்? அவளைப் பற்றி என்ன தெரியும்?'' என்று கேட்டார்.

''ஐயா! நான் குழந்தை வயதில் என்னைப் பெற்ற தாயை இழந்தேன். பிறகு எனக்கு அன்னையின் அன்பை அளித்தவள் அந்த மூதாட்டி தான். அவள் என் குரு; என் தெய்வம். அவளைப் பற்றி வேறு என்ன கேட்கிறீர்கள்?''

''அந்த மூதாட்டிக்கு நிரந்தரமான வாசஸ்தலம் ஏதாவது உண்டா? எப்போதும் சுற்றித் திரிந்து கொண்டேயிருப்பவள்தானா?''

''கோடிக்கரையிலிருந்து இலங்கையை நெருங்கி வரும்போது பூதத்தீவு என்று ஒரு தீவு இருக்கிறது. அதில் ஒரு பாறைக் குகை இருக்கிறது. அங்கேதான் அந்த அம்மாள் பெரும்பாலும் இருப்பாள். அவ்விடத்தில்தான் தங்களை நான் முதன் முதலில் பார்த்தேன்.''

''என்னை அங்கே பார்த்தாயா?''

''ஆம்! அந்தப் பாறைக் குகையில் சில அழகான சித்திரங்களை அந்த அம்மாள் எழுதியிருக்கிறாள். அந்தச் சித்திரங்களில் தங்கள் உருவத்தையும் கண்டேன்! பிறகு ஒருநாள் கோடிக்கரையில் தங்களை நேரில் பார்த்த போது, அதனால்தான் பிரமித்துப் போனேன்.''

''ஓ! இப்போது எல்லாம் எனக்குத் தெரிகிறது. விளங்காத விஷயமும் விளங்குகிறது. சமுத்திரகுமாரி! அந்த மூதாட்டிக்கும் எனக்கும் உள்ள உறவைப் பற்றியும் உனக்குத் தெரியுமா?''

''ஏதோ உறவு இருக்க வேண்டும் என்று ஊகித்தேன். ஆனால் இன்ன உறவு என்று தெரியாது!''

''பூங்குழலி! அந்த மூதாட்டி என் பெரிய தாயார். நியாயமாகத் தஞ்சாவூர் சிங்காதனத்தில் வீற்றிருக்க வேண்டிய பெருமாட்டி அவள்.....''

''கடவுளே, அப்படியா?''

''ஆனால் விதியின் எழுத்து வேறு விதமாயிருந்தது. யார் என்ன செய்ய முடியும்? என் தந்தையின் உள்ளத்தில் ஏதோ ஓர் இரகசியத் துன்பம் இருந்து வேதனைப்படுத்தி வருகிறது என்று சில சமயம் எனக்குத் தோன்றுவதுண்டு. அதன் உண்மையை இப்போதுதான் கண்டு பிடித்தேன். என் பெரிய தாயார் இறந்து விட்டதாக என் தந்தை எண்ணிக் கொண்டிருக்கிறார். தம்மால் இறந்து விட்டதாகவும் எண்ணிக் கொண்டிருக்கிறார். அவள் இறக்கவில்லை. உயிரோடிருக்கிறாள் என்பதை அவருக்கு நான் போய்ச் சொல்ல வேண்டும். சொன்னால் அவர் இருதயத்தின் தாபம் தணியும்; அவரை அரித்துக் கொண்டிருக்கும் மனவேதனை தீரும். சக்கரவர்த்தியின் உடல்நிலை சரியாக இல்லை என்றுதான் உனக்குத் தெரிந்திருக்குமே? மனித வாழ்க்கை அநித்தியமானது. எப்போது என்ன நேரிடும் என்று யாரும் சொல்வதற்கில்லை.

வானத்தில் சில நாட்களாகத் தூம கேது ஒன்று தோன்றி வருகிறது. அதைப் பற்றி ஜனங்கள் பலவாறு பேசிக்கொள்கிறார்கள். சக்கரவர்த்தியின் மனமும் அதனால் பாதிக்கப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. இந்த நிலைமையில், விபரீதமாக எதுவும் நேர்வதற்கு முன்னால், நான் கண்டுபிடித்த விவரத்தை அவருக்குத் தெரிவித்து விட வேண்டும். சமுத்திர குமாரி! அதற்காகவேதான் நான் அவசரமாகத் தஞ்சைக்குப் போக விரும்புகிறேன். நீ எனக்குச் செய்யும் உதவி எவ்வளவு முக்கியமானது என்று இப்போது தெரிகிறது அல்லவா?''



ர்வத்துடன் இளவரசரின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்த பூங்குழலி ஒரு பெருமூச்சு விட்டாள். ''கடவுளே! மனித வாழ்க்கையில் ஏன் இத்தனை இன்பத்துடன் துன்பத்தையும் வைத்தாய்?'' என்று முணுமுணுத்தாள்.

பிறகு இளவரசரைப் பார்த்து, ''ஐயா! இந்தப் பேதையினால் தங்களுக்கு ஏதேனும் உதவி ஏற்பட்டால் அது என் பூர்வ ஜன்ம பாக்கியம். ஆனால் இதற்கு என் உதவி ஏன்? சேநாதிபதி முதலியவர்களிடம் சொல்லியிருந்தால் அவர்கள் தங்களைத் தஞ்சைக்கு அனுப்பியிருக்க மாட்டார்களா?'' என்றாள்.

''இல்லை; அவர்கள் யாரிடமும் சொல்ல நான் விரும்பவில்லை. என்னை எப்படியாவது சிம்மாசனம் ஏற்றுவதில் முனைந்திருக்கும் அவர்களுக்கு இது ஒன்றும் முக்கியமாகத் தோன்றாது. என் தந்தையின் அந்தரங்கத்தை அவர்களிடமெல்லாம் சொல்வதற்கும் நான் இஷ்டப்படவில்லை. சொன்னால் அவர்கள் புரிந்து கொண்டிருக்கவும் மாட்டார்கள். உன்னிடம் இன்னோர் உதவியும் கோருகிறேன், சமுத்திரகுமாரி! அதற்காகவே முக்கியமாக இங்கே யானையை நிறுத்தினேன். எனக்குச் சக்கரவர்த்தி பட்டமும் சாம்ராஜ்ய சிம்மாசனமும் அளித்த ஜோசியர்கள் என் வாழ்க்கையில் பல அபாயங்கள் — பல கண்டங்கள் — ஏற்படும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். இந்தப் பிரயாணத்தில் அப்படி ஏதாவது எனக்கு நேர்ந்துவிட்டால்... என் தந்தையை நான் சந்திக்க முடியாமல் போய்விட்டால்,...... நீ சக்கரவர்த்தியிடம் போகவேண்டும். எப்படியாவது அவரைச் சந்தித்து என் பெரியம்மை உயிரோடிருக்கிறாள் என்பதை அவரிடம்

சொல்ல வேண்டும். அவர் இஷ்டப் பட்டால் அந்த மூதாட்டியை அவரிடம் அழைத்துப் போக வேண்டும். இந்தக் காரியத்தையெல்லாம் செய்வாயா, பூங்குழலி?''

''தங்களுக்கு ஒரு கண்டமும் நேராது; அபாயம் தங்களிடம் நெருங்கப் பயந்து ஓடும். கட்டாயம் பத்திரமாய்த் தஞ்சாவூர் போய்ச் சேர்வீர்கள்...''

''ஒருவேளை எனக்கு ஏதாவது நேர்ந்தால் நான் கோரியபடி செய்வாய் அல்லவா?''

''கட்டாயம் செய்கிறேன், இளவரசே!''

''இந்த முக்கியமான காரியத்தை வேறு யாரிடம் நான் ஒப்புவிக்க முடியும்? நீயே சொல் பார்க்கலாம்.''

''என்னிடம் ஒப்புவிக்க வேண்டிய காரியத்தை ஒப்புவித்தாகி விட்டது. இத்துடன் என் உபயோகம் தீர்ந்து விட்டதல்லவா? நான் விடைபெற்றுக் கொள்ளலாமா?'' என்றாள் பூங்குழலி. அவளுடைய குரல் கண்ணீரின் ஈரப் பசையோடு கலந்து வந்தது.

''ஆகா! அது எப்படி? தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தை இன்னும் நாம் அடையவில்லையே? சோழ நாட்டுப் போர்க் கப்பல்களை இன்னும் காணவில்லையே? அதற்குள் எப்படி விடைபெற்றுக் கொள்ளலாம்? கோபித்துக் கொள்ளாதே! இன்னும் சிறிது நேரம் பல்லைக் கடித்துக் கொண்டு என்னுடைய சகவாசத்தைப் பொறுத்துக் கொள். யானை மேல் மறுபடியும் ஏறி இன்னும் கொஞ்ச தூரம் என்னுடன் வா! புலிக் கொடி பறக்கும் கப்பலைத் தூரத்தில் கண்டதும் நீ என்னை விட்டுப் பிரிந்து செல்லலாம்!'' என்றார் இளவரசர்.

மறுமொழி ஒன்றும் சொல்லாமல் பூங்குழலி யானை நின்ற இடத்தை நோக்கி நடந்தாள். இளவரசரும் சென்றார். அவருடைய வார்த்தைக்குப் படிந்து யானை மண்டியிட்டுப் படுத்தது. இருவரும் அதன் முதுகில் ஏறிக் கொண்டார்கள். முன் போல் யானையை இளவரசர் விரட்டவில்லை. ஆயினும் விரைவாகவே நடந்து சென்றது.

''சமுத்திரகுமாரி! எனக்கு மிகவும் பிடித்த சில காரியங்களைப் பற்றிச் சொன்னேனே? உனக்குப் பிடித்தவை என்னவென்று சொல்ல வேண்டாமா?'' என்றார் அருள்மொழிவர்மர்.

''எருமை வாகனத்தின் மீது வரும் யமனை எனக்கு ரொம்பப் பிடிக்கும். நள்ளிரவில் பாறை உச்சியின் மீது நின்று கொண்டு கொள்ளிவாய்ப் பிசாசுகளை நேரம் போவதே தெரியாமல் பார்ப்பதற்கு ரொம்பப் பிடிக்கும்...''

''நல்ல விசித்திரமான குணமுள்ள பெண் நீ!''

''தங்கள் சிநேகிதர் கூறியது போல் 'பைத்தியக்காரப் பெண்' என்று சொல்லுங்கள். அதற்காக நான் வருத்தப்பட மாட்டேன். அப்புறம் சிறிய படகில் ஏறி அலை கடலின் நடுவில் போய்க் கொண்டே இருப்பதற்குப் பிடிக்கும். அதிலும் கடலில் சுழற்காற்று அடித்ததோ, என் உற்சாகம் எல்லை கடந்து விடும். அப்போது படகு ஒரு சமயம் அலை உச்சியில் ஏறி வானுலகத்தை எட்டிப் பிடிக்கும்; மறுகணம் பாதாளத்தில் தடாலென்று விழும். அதைப் போல் எனக்குப் பிடித்த காரியம் வேறொன்றுமில்லை. சற்று முன்



னால் இந்த யானை வெறி கொண்டது போல் ஓடி வந்ததே. அப்போதும் எனக்கு அவ்வளவு உற்சாகமாகவே இருந்தது!"

"ஆ! பூங்குழலி! முருகப் பெருமான் உன்னுடைய புன்னகையை நாடி வந்திருந்தால் அடியோடு தோற்றிருப்பார். யானை முகனை அனுப்பிக் குறமகள் வள்ளியைப் பயமுறுத்தினாரே, அந்த யுக்தி ஒன்றும் உன்னிடம் பலித்திராது!" என்றார் இளவரசர்.



வர்கள் தொண்டைமான் நதியின் முகத்துவாரத்தை அணுகிய போது "ஆ! இது என்ன?" என்று பூங்குழலி கூச்சலிட்டாள்.

"என்ன? என்ன?" என்று இளவரசர் ஆவலுடன் கேட்டார்.

"புலிக் கொடியுடன் கூடிய மரக்கலங்கள் நான் பார்த்த இடத்தில் இல்லையே! என்னைப் பற்றித் தாங்கள் என்ன நினைப்பீர்கள்? சேநாதிபதி என் மீது சந்தேகப்பட்டது போல் தங்களை ஏமாற்றி அழைத்து வந்தவள் ஆகிவிட்டேனே!" என்றாள்.

"அப்படி நான் ஒருநாளும் நினைக்க மாட்டேன், பூங்குழலி! நீ பொய் சொல்லி என்னை வஞ்சித்து அழைத்து வர எவ்வித முகாந்தரமும் இல்லை..."

"ஏன் இல்லை, இளவரசே! காதல் காரணமாக இருக்கலாம் அல்லவா? உலகமெல்லாம் அழகில் மன்மதனையும் வீர பராக்கிரமத்தில் அர்ச்சுனனையும் நிகர்த்தவர் என்று போற்றும் பொன்னியின் செல்வர் மீது மோகங் கொண்டு ஒரு பேதைப் பெண் இம்மாதிரி செய்திருக்கலாம் அல்லவா?"



"பெண்ணே! சேநாதிபதி இங்கே இச்சமயம் இருந்திருந்தால் ஒருவேளை அவ்வாறு சந்தேகப்பட்டிருக்கலாம். ஆனால் உன் மனத்திலும் என் மனத்திலும் அத்தகைய பைத்தியக்கார எண்ணங்களுக்கு இடமில்லை."

"ஐயா! பழையாறை அரண்மனையில் வானதி தேவி என்று வீரர் குலத்து இளவரசி ஒருத்தி இருக்கிறாளே, அவளைப் பற்றியும் அப்படித் தாங்கள் சொல்வீர்களா?"

"ஆம், ஆம்! அதை நான் மறந்து விடவில்லை. இந்தச் சேநாதிபதியும் என் தமக்கையும் சேர்ந்து அந்தப் பெண்ணை என் கழுத்தில் கட்டி விடப் பார்க்கிறார்கள். சோழ குல சிம்மாசனத்தில் அமர வேண்டும் என்ற ஆசையினால் அந்தப் பேதைப் பெண்ணுக்கும் அத்தகைய ஆசை ஒருவேளை இருக்கலாம். அதற்கு நான் பொறுப்பல்ல, பூங்குழலி! அது போகட்டும்! நீ பார்த்தபோது கப்பல்கள் எங்கே இருந்தன?" என்று இளவரசர் கேட்டார்.

"அதோ அந்த முனையில்தான் நின்றுகொண்டிருந்தன! எனக்கு மிக நன்றாக நினைவிருக்கிறது!" என்றாள் பூங்குழலி.

"அதனால் என்ன? கொஞ்சம் அப்பால் இப்பால் நகர்ந்து சென்று நிற்கக் கூடும் அல்லவா? எல்லாவற்றுக்கும் கடற்கரை வரையில் போய்ப் பார்த்து விடுவோம்!" என்றார் இளவரசர்.

"கப்பல்கள் போயிருந்தால் நல்லதாய்ப் போயிற்று. இப்பொழுது எதற்காகப் போய்த் தேட வேண்டும்?" என்றாள் பூங்குழலி.

"ஆகா! நீ அப்படி நினைக்கலாம். ஆனால் எனக்கு அதைப் போல் ஏமாற்றம் தருவது வேறொன்றுமில்லை!" என்றார் இளவரசர்.



ந்நூறு வருஷத்துக்கு முன்னால் இலங்கை இளவரசனாகிய மானவன்மன் காஞ்சிபுரத்தில் வந்து சரண் புகுந்திருந்தான். அவனுக்கு இராஜ்யத்தை மீட்டுத் தருவதற்காக மாமல்ல சக்கரவர்த்தி ஒரு பெரும் படையை அனுப்பினார். அவர் அனுப்



## அருள் வாக்கு

பிரம்மச்சாரி தான் மட்டில் தன் ஆசிரம தர்மத்தைப் பண்ணுகிறான். ஸந்நியாசியும் அப்படியே. இல்லறம் நடத்துகிற கிருஹஸ்தாச்ரமி மட்டும் தனியாளாக இல்லாமல் பத்தினியுடன் சேர்ந்தே தன் தர்மத்தை, கர்மங்களைப் பண்ண வேண்டும் என்று சாஸ்திரம் வைத்திருக்கிறது. புருஷன் — மனைவி இருவருக்கும் இது பொது சொத்து. பத்தினி இருக்கிற கிருஹஸ்தனுக்கு மட்டுமே யாகயக்ஞாதிகளை சாஸ்திரத்தில் வைத்திருக்கிறதே தவிர, பிரம்மசாரிக்கும், ஸந்நியாசிக்கும் இவை இல்லை. இந்திரிய ஸௌக்கியத்துக்காக மட்டுமே பத்தினி என்றால் பத்தினி இறந்து விட்டால் ஒருத்தன் யக்ஞம் பண்ணக் கூடாது என்று வைத்திருக்குமா? அவள் பக்கத்தில் நின்றால் தான் இவன் யக்ஞம் பண்ணலாம். கர்த்தாவாக அவளே நேரே யக்ஞம் பண்ண 'ரைட்' இல்லை என்பதை மட்டும் கவனிக்கும் பெண் விடுதலைக்காரர்கள், அவள் இல்லாவிட்டால் இவனுக்கும் அந்த 'ரைட்' போய் விடுகிறது என்பதையும் கவனிக்க வேண்டும். வேதத்திலேயே இப்படி விதித்திருக்கிறது. ("பத்நீ வதஸ்ய அக்னி ஹோத்ரம் பவதி") ஒரு பெரியவர் தன் பத்தினி செத்துப் போன போது, "என் யக்ஞ கர்மா நுஷ்டானங்களையெல்லாம் கொண்டு போய் விட்டாயே!" என்று அழுதாராம்.

தர்மத்துக்கும், கர்மத்துக்கும் கை கொடுப்பவளாக அப்படிப்பட்ட ஓர் உயர்ந்த ஸ்தானம் நம்முடைய சாஸ்திரங்களில் ஸ்திரீக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

பிய படைகள் இந்தப் பிரதேசத்திலே தான் வந்து இறங்கின. அச்சமயம் தொண்டைமான் ஆறு உள்ள இடத்தில் ஒரு சிறிய ஓடைதான் இருந்தது. கப்பல்கள் வந்து நிற்பதற்கும் படைகள் இறங்குவதற்கும் சௌகரியமாவதற்கு அந்த ஓடையை வெட்டி ஆழமாகவும் பெரிதாகவும் ஆக்கினார்கள். பிறகு அந்த ஓடை தொண்டைமாறு என்று பெயர் பெற்றது. முகத்துவாரத்தின் அருகில் அந்த நதி வளைந்து வளைந்து சென்றது. இருபுறமும் மரங்கள் அடர்ந்திருந்தன. இதனால் கடலிலிருந்து பார்ப்போருக்குத் தெரியாதபடி கப்பல்கள் நிற்பதற்கு வசதியாக இருந்தது.

அவ்வாறு பூமிக்குள் ஆறு புகுந்து தண்ணீர் நிறையத் தேங்கியிருந்த இடம் ஒன்றிலேதான் இளவரசரைச் சிறைப் பிடிக்க வந்த மரக்கலங்களைப் பூங்குழலி பார்த்திருந்தாள். முதலில் பார்த்த இடத்தில் அந்த மரக்கலங்கள் இப்போது காணப்படவில்லை. அதாவது பாய் மரங்கள், கொடிகள் முதலியவை தென்படவில்லை. அந்த இடத்தை மேலும் நெருங்கிப் பார்த்த போது ஓர் அதிசயமான காட்சி புலப்பட்டது. கப்பல் ஒன்று வெள்ளத்தை விட்டு அதிக தூரம் பூமிக்குள்ளே சென்று சேற்றிலே புதைந்து போயிருந்தது. அதன் பாய் மரங்கள் கொடிகள் முதலியவை ஒடிந்தும் சிதைந்தும் கிடந்தன. அதில் மனிதர்கள் யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. இரண்டு நாளைக்கு முன்னால் அவள் பார்த்த கப்பல்களிலே அது ஒன்று என்பது பூங்குழலிக்கு நன்கு தெரிந்தது.

இளவரசரைச் சிறைப்பிடித்துக் கொண்டு போவதற்கென்று வந்த கப்பல்களில் ஒன்று, அதுவே சேற்றில் சிறைப்பட்டுக் கிடப்பதைக் கண்டு பூங்குழலி ஆச்சரியக் கடலில் முழுகினாள்!

(தொடரும்)

# அரசியல் அறியாதவர்கள்!

**மா**லதிக்குக் குழந்தை பிறந்ததும்தான் எல்லோருக்கும் நிம்மதியாயிற்று. மொட்டு மலர்ந்தாற்போல் சின்னஞ்சிறு சிசு. ரோஜாப் பூ நிறம். பிறந்ததும் அது மூச்சு விட்டது. அழுதது. உதட்டைப் பிதுக்கியது. நெஞ்சோடு அணைத்துக் கொண்டதும் கை கால்களை உதறிக் கொண்டு முரண்டியது. எல்லோரும் கொடுத்த துணிகளுக்கிடையே அதனுடைய ரோஜா மலர் முகம் எட்டிப் பார்த்தது. அழகான, இனிமையான முகம். மாசற்ற அம் முகத்தைப் பார்த்ததுமே எல்லாத் துன்பங்கள், கவலைகள், ஏக்கங்கள், துயரங்கள் மறந்து போய்விடும். ஆனால் மாலதிக்கு அச் சிசுவின் விழிகளில் செந்தணல்தான் தெரிந்தது. கனியும் அந்த நெருப்பில், எரிந்து சாம்பலாகி விட்ட தனது வீடு, வாசல், காணாமற் போன கணவன், பசுக்கள், மாடுகள், ஆடுகள், வாத்துக்கள், புறாக்கள், பாதி நெய்திருந்த சிவப்புக் கரையிட்ட துண்டு, எரிந்து போன தனது படுக்கை, சமையல் அறையின் சாமான் சட்டுகள், வீட்டின் பகுதி, சமையலறை என யாவுமே தெரிந்தன.

அவளது உடல் மட்டுமல்ல, மனநிலையும் சரியில்லாமல் தானிருக்கிறது. உயிரோடு இருந்துதான் என்னவாகப் போகிறதென்று அவள் நினைத்தாள். இப்படி வாழ்வதை விட, இறந்து போவதே மேல். ஆனால் அவளது மாமியார் அதே குறையாத அன்புடன், பாசத்துடன், மிகுந்த அக்கறையுடன், கோழி தன் குஞ்சை அரவணைத்துப் பாதுகாப்பது போல் கவனித்துக் கொண்டிருக்கிறாள். தனது துயரத்தையெல்லாம் மனத்திற்குள் அழுத்திக் கொண்டு மாலதிக்குத் தைரியம் சொல்லுகிறாள். விம்மி விம்மி அழுதுகொண்டே, அழுகையினூடே மாலதியிடம் "அழாதே! பொன் மகளே!" என்கிறாள். மாலதிக்கு உடன் பிறந்தவர்கள், அப்பா, அம்மா என எவருமே கிடையாது. தனதென்று சொல்லிக் கொள்ள எவருமில்லை. சிறுவயதிலிருந்தே தூர பந்துவான ஒருவர் வீட்டில் அடி, உதை, வசவு, திட்டுகளின் நடுவே காரியம் செய்து கொண்டு வளர்ந்தவள். துயரம், துன்பம் என்பது என்னவென்பதை நன்கு அறிந்தவள். கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளப் பழகியவள் அவள். இப்பொழுதுதான் வாழ்வில் மாமியாரின் நிழலிலே அன்பு, பாசமென்பது என்னவென்று உணர்ந்தாள்.

ஆனால், அந்தப் பயங்கரச் சம்பவம் நடந்து பதினான்கு நாட்கள் கழித்து பத்ரேஸ்வரின் உடல் கிடைத்து விட்டது என்ற செய்தி கிட்டியதும் அவள் மாமியார் பைத்தியம் பிடித்தவள் போலாகிவிட்டாள். அவளது ஒரே மகன்தான் பத்ரேஸ்வர். அருமருந்தப் புதல்வன். இரண்டு பெண்கள்



இரு புறமும் அவளை அழுத்திப் பிடித்துக் கொள்ள வேண்டியதாயிற்று. பத்ரேஸ்வரனின் உடலில் சில பகுதிகள், அவன் அணிந்திருந்த பனியன், தலையில் கட்டியிருந்த முண்டாசின் ஒரு பகுதி இவைதான் கிடைத்திருந்தன. இவற்றை ஒரு முடிச்சாகக் கட்டி எரியூட்டப்பட்டது.

பூரபி பர்மதை

## அஸ்ஸாமிய மொழிக் கதை:

ஏனிப்படி நேர்ந்தது!

மாலதிக்கு அரசியல் தெரியாது. அவள் மாமியாருக்குத் தெரியாது! ஏன் ஆண் மகனை பத்ரேஸ்வரனுக்குத் தெரியாது. இது மட்டுமல்ல! இத்தனை மக்களை, துக்கமும், யாவையும் இழந்துவிட்ட துயரமும், நிராசையும் அலைக்கழித்துக் கொண்டிருக்கிறதே! இவர்களுக்குத் தெரியுமா அரசியல்! கூடாரங்களில் அடைக்கலம் கொடுக்கப்பட்டிருக்கும் இவர்களுக்குப் புரியுமா அரசியல்! அவர்களுக்குப் புரிந்ததெல்லாம் இன்னமும் கண்களை மூடிக் கொண்டதும் கேட்கும் பயங்கரமான அலறல்கள். கொழுந்து விட்டெரியும் நெருப்பு. எரிந்து சாம்பராகிவிட்ட வீடுகள். அவ்வளவுதான்.

அவளுக்கு நன்றாக நினைவிருக்கிறது. அவள் ஆடுகளைப் பிடித்துக் கட்டுவதற்காகப் போய்க் கொண்டிருந்தாள். அன்று பகலிலிருந்தே அவளுக்கு உடம்பு சரியில்லை. முணுக் முணுக்கென்று வலித்தது. சாப்பாட்டை விரைவில் முடித்துக் கொள்ளும் எண்ணத்துடன் அவள் மாமியார் சமைப்பதில் மும்முரமாய் இருந்தாள். மாலை வெளிச்சம் இன்னமும் மங்கவில்லை. அப்பொழுது, வெளி முற்றத்தின் கதவைத் திறந்து கொண்டு வீரேனின் அம்மா பறந்தோடி வந்தாள். அவளது பதற்றத்தைக் கண்டு, "என்னம்மா! என்ன விஷயம்?" என வினவினாள் மாலதி.

"என்னவென்று சொல்லட்டும்! உன் மாமியாரிடம் சொல்லு. நீயும் புறப்படு! சீக்கிரம் புறப்படுங்கள். இங்கிருந்து போய் விடுங்கள். அவர்கள் விட மாட்டார்கள். கொன்று குவித்து விடுவார்கள். வீட்டிற்கு நெருப்பு வைக்கப் போகிறார்கள்; ஓடி விடுங்கள். அதோ கிராமத்தின் அந்தக் கோடியிலிருந்து நெருப்பு வைத்துக் கொண்டே வருகிறார்கள்!"

"என்ன! என்ன!" என்று கேட்டவாறே



அவளது மாமியார் நறுக்குவதற்காக வைத்திருந்த கீரைக் கட்டை எடுத்துக் கொண்டு சமையலறையிலிருந்து வெளியே வந்தாள். இதற்குள் வீரேனின் அம்மா திட்டி வாசற் கதவைத் திறந்து கொண்டு வெளியேறி இருந்தாள். பத்ரேஸ்வர் அச்சமயம் வீட்டி லில்லே.. சற்று நேரத்திற்கெல்லாம் வந்து விட்டான். பயம், பதற்றம், தைரியம் எல்லாம் கலந்த குரலில் — அம்மா! எவ்வளவு முடியுமோ, வேண்டியதை எடுத்துக் கொள்ளுங்கள். ஊம், சீக்கிரம்! நீங்களிருவரும் ஊர்க்காரர்களுடன் ஓடி விடுங்கள் — நான் வந்து... என்றான்.

''நீ என்ன செய்யப் போகிறாய்?'' எனத் திகிலுடன் அம்மா வினவினாள்.

''நான் மற்றவர்களுடன் இந்தப் பக்கம் போகிறேன்'' என்றவன், தலையில் துண்டை வரிந்து கட்டிக் கொண்டான். கையில் நீண்ட 'தா'வை எடுத்துக் கொண்டவன் — அம்மா விடம்—''இதோ வந்துவிடுகிறேன்'' என்றான். மாலதியை ஏற இறங்க ஒருமுறை பார்த்து விட்டு, ''ஜாக்கிரதையாக இரு — இதோ வருகிறேன்'' எனக் கூறி விரைந்தான்.

'இதோ வருகிறேன்' எனக் கூறி அவன் சென்றது நினைவில் தேங்கி நின்றது. அது மேலெழும்பி வரும்போதெல்லாம் இதயம் வேகமாய் அடித்துக் கொண்டது. 'இதோ வருகிறேன்' எனக் கூறி வராமற் போய் விட்டது எத்தனை கொடுமையானது. அதைக் கேட்டுக் கொண்டு நின்றது எத்தனை பரிதாபமானது.

இதற்குப் பிறகு நடைபெற்ற சம்பவங்கள். திடுதிடுவெனப் பரவிய தீ, தானியங்கள் கருகிய நாற்றம்; மக்களின் அவலக் குரல், கூச்சல், திகிலுற்ற மக்களின் ஓலம், நெஞ்சைப் பிழியும் கதறல், தெளிவற்ற புலம்பல்கள், மாடுகள், பசுக்கள், ஆடுகள், கோழிகளின் கத்தல், கதறல், குழப்பம்...

......இவற்றுக்கிடையே அவர்கள் ஓடினார்கள். ஆபத்தான இடத்திலிருந்து சற்று தூரம் சென்ற பின் அவள் தன்னுடைய வீட்டைத் திரும்பிப் பார்த்தாள். நெடிதுயர்ந்த மூங்கில் புதர் போல் உயர்ந்த தீ நாக்குகளுக்கிடையே அவளுடைய வீடு, அவளுடைய உலகம், எதிர்காலக் கனவுகள், நிகழ்கால இன்பங்கள் யாவும் எரிந்து சாம்பலாகிக் கொண்டிருந்தன...

பிரதான சாலைக்கு வந்தபின் மாலதி தனது கால்கள் வெட வெடவென்று நடுங்குவதை உணர்ந்தாள். அடிவயிற்றை விடாமல் தொடர்ந்து வலித்தது. சாலையில் அப்படியே உட்கார்ந்து விட்டாள். உடனிருந்தவர்கள் அவளை மெல்லப் பிடித்து அருகிலிருந்த ஒரு வீட்டிற்குள் அழைத்துச் சென்றனர். சற்று நேரத்துக்கெல்லாம் மாலதி அன்றலர்ந்த மலர் போன்ற மகவுக்குத் தாயானாள்.

பசவேஸ்வரனைப் பற்றி எதுவும் தெரியவில்லை எனச் சொல்லுகிறார்கள். ஹரிராம் வீட்டில் அப்பா, பிள்ளைகள் எவரும் மிஞ்சவில்லை. வெட்டிப் போட்டு விட்டார்களாம். ஹரியின் அண்ணா கொல்லப்பட்டு விட்டான். ஹரி மட்டும் எப்படியோ தப்பி விட்டான். பிரேன் ஹாஜரியின் தங்கை புருஷனைக் கண்டதுண்டமாக வெட்டிப் போட்டு விட்டார்களாம். மதாரியின் இரு பிள்ளைகளும் தீர்ந்து விட்டார்கள். படிகசாரியில் பலகிராமங்கள் தீக்கிரையாகி விட்டனவாம். இச்செய்திகள் எல்லாம் மாலதியின் காதில் வீழ்ந்தவண்ணமாக இருந்தன.

இந்தச் செய்திகள் எல்லாம் பத்திரிகைகளில் வெளியாகி இருப்பதாகச் சொன்னார்கள். புகைப்படங்கள் கூட வெளியாகியிருக்கிறதாம். அப்படியென்றால் உலகத்திற்கு எங்களைப் பற்றிய செய்தி தெரிந்து விட்டதா? என்ன தெரிந்து விட்டதாம் உலகத்திற்கு! நாங்களெல்லோரும் எவ்வளவு ஒற்றுமையாக, ஒன்றாக வாழ்ந்தோம் என்று தெரியுமா! ஒருவர் மற்றொருவரின் இன்ப துன்பங்களில் ஒன்றி, துன்புறும் போது துயரப் பட்டும், இன்புறும் போது, மகிழ்வும் கொண்டோம் என்பது இந்த உலகத்திற்குத் தெரியுமா! புரிந்து கொள்ளத்தான் தெரியுமா! இன்றுஏதென்று அறியாதபகைமைகொண்டு ஒருவரையொருவர் வெட்டிக் கொண்டு மடிந்தோம் என்பது மட்டும் தானே தெரியும்! இது ஏன்! எப்படி நேர்ந்தது?

நான் சாதாரண, படிக்காத, எளிய பெண். ஆயினும் உலகத்தாரின் முன் கரம் குவித்துக் கேட்டுக் கொள்ளுகிறேன். எங்களுக்கு அமைதியை, சாந்தியை அளியுங்கள். நாங்கள் இழந்து விட்டவையெல்லாம் இனித் திரும்ப வராது. ஆனால் எஞ்சியிருப்பதை கடந்த காலத்தின் இனிய கனவுகளால் அலங்கரித்துக் கொண்டு வாழ எங்களுக்கு வகை செய்யுங்கள். நாங்கள் யாருடைய எதிரிகளோ, பகைவர்களோ இல்லை. நாங்கள் யாரையும் கொலை செய்ய விரும்பவில்லை. எங்கள் கரத்தில் ரத்தக் கறை படிவதை நான் விரும்பவில்லை. சொல்லுங்கள்! நாங்கள் யாருடைய பகைவர்கள்? எங்களுடைய பகைவர்கள் யார்?

நாட்கள் கழியக் கழிய, தவிப்பு அதிகரித்துக் கொண்டே போயிற்று. பிறர் தயவில் உயிர் வாழ்ந்து, உணவிற்கு, ஒரு படி அரிசி, உப்பு, பருப்பு என பிறரிடம் கை ஏந்தி, தயவை எதிர்நோக்கி, மக்கள் பெரிதும் நிராசையுற்றிருந்தனர்.

அந்த ஒரு நாள், அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த நாளும் வந்தது. மீண்டும் அமைதி நிலவவே முகாமிலிருந்த மக்கள் தங்கள் தங்கள் இல்லங்களுக்குத் திரும்பலாயினர். தாயின் மடி போன்று இதமான, மென்மையான தங்களது நிலம், தங்களது மண்ணிற்குத் திரும்பச் செல்வது பற்றிய பேச்சு எங்கும் பரவியது.

பத்ரேஷ்வர் இன்று இல்லை. என்றாலும் கிராமத்து இளைஞர்களில் சிலர் அந்தப் பழைய இடத்திலேயே அவர்களுக்கு வீடு கட்டியிருந்தார்கள். இரண்டு பேர் வசிக்கத் தக்க சிறியதொரு வீடு. பத்ரேஸ்வர் இல்



**வாசகர் பங்கு:**

# தளபதி திடமதி

## பரிசு ரூ. 400/-

தளபதி திடமதியின் அறிவுக் கொழுந்தான கருத்துக்கள், பொதுக் கூட்டத்தில் பேசுவது போலவோ அல்லது அமைச்சர், சகா, அல்லது அதிகாரியிடம் உரையாடுவது போலவோ, அமைந்திருக்கலாம். மாறிவரும் அரசியல் சூழ்நிலைகள், சமுதாயப் பிரச்னைகள் போன்ற எதையும் நமது ஆஸ்தான ஜோக்கர் விட்டு வைக்க மாட்டார். என்ன 'விட்' அடிப்பார் என்பதைத்தான் கீழே கூப்பனில் நீங்கள் எழுதி அனுப்ப வேண்டும். பிரசுரமாகும் எல்லாத் துணுக்குகளும் ரூ. 25 பரிசு பெறும். ஒருவரே எழுதிய துணுக்குகள் சில அடுத்த பல இதழ்களில் பிரசுரமானாலும் ஒவ்வொரு முறையும் பரிசு இரட்டிப்பாகும். அதிகபட்சமாக ஒரு துணுக்கு ரூ. 400/— வரை சன்மானம் பெறும் வாய்ப்புண்டு. உறை மீது "தளபதி 'திடமதி'" என்று குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி இதழ்: 31.1.88 — முடிவு தேதி: 9.2.88.

தளபதி திடமதி: "..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

.............................."

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

லாத இல்லத்தில் தான் நுழையப் போகிறோம் என்ற நினைவே அவளுக்கு வேதனையைத் தந்தது.

குழந்தையை மார்புடன் அணைத்தவாறு அவளது மாமியார் முன்னே நடந்தாள். கடந்த சில நாட்களாக அழுதழுது அவள் முகம் வீங்கிப் போயிருந்தது. கால்கள் தடுமாறின. அவளுக்குப் பின்னால் மாலதி மூட்டை முடிச்சுகளுடன் சென்றாள். ஒன்றரை மாதத்திற்குப் பிறகு மாமியார் மருமகள் இருவரும் தாங்கள் வாழ்ந்த இடத்திற்குத் திரும்பச் செல்லுகின்றனர். இடிபாடுகள், சாம்பல் குவியல்கள்... முன் வாசலிலிருந்த ஹரசிங்கார் செடி இருந்த இடம் சூனியமாகி விட்டிருந்தது. முற்றத்திலிருந்த துளசி மாடம் கவனிப்பாரற்றுக் கிடந்தது.

குழந்தையை மாலதியிடம் கொடுத்து விட்டு அவள் மாமியார் அப்படியே உட்கார்ந்து விட்டாள். "அம்மா! என்னம்மா ஆயிற்று?" என்று பதறிய மாலதி வேலிக்கு அப்பாலிருந்து ஒற்றையடிப் பாதையில் பிரேன் நாஜரியின் அம்மா வருவதைக் கண்டு திகைத்துப் போனாள். அருகே நெருங்கியதும் பிரேனின் அம்மா — "வந்து விட்டீர்களா?" என்றாள் ஆதுரத்துடன்.

"ஆமாம்" — என்றாள் மாலதியின் மாமியார்.

பிரேனின் அம்மா மாலதியை நோக்கி — "மகளே! நீ உள்ளே போய் சாமான்களை எடுத்து வை. வீட்டை சுத்தப்படுத்தி வைத்திருக்கிறேன். பிறகு நாமெல்லோருமாக சுண்ணாம்பு பூசி விடலாம்." என்றவள், மாலதியின் மாமியாரைப் பார்த்து — "இப்படி உட்காருவார்களா? எழுந்து உள்ளே வா! நடந்தது நடந்து போயிற்று" என்றாள்.

அவள் குரலில் ஆத்திரமோ, அருவெறுப்போ விழிகளில் வெறுப்போ இல்லை. மாலதி பிரேனின் அம்மாவிடம் தன்னைப் போலவே பாதிக்கப்பட்ட மாபெரும் இழப்பினால் துயரப்படும் ஒருத்தியைத் தான் கண்டாள். பிரேனின் மரணத்துக்குக் காரணம் பத்ரேஷ்வர் என்று சொன்னார்கள். ஆனால்....

"அம்மணி!"

"மகளே!"

இருவரும் ஒருவரையொருவர் அணைத்துக் கொண்டனர்.

"உன் ஆடுகளைத் தேடிப் பிடித்துக் கட்டி வைத்திருக்கிறேன். கறுப்பு ஆடு, குட்டி போட்டிருக்கிறது".

மாலதி அரசியல் என்றால் என்னவென்பதை அறியாத பேதைப் பெண். தன்னைப் போன்றே அரசியலை அறியாத இன்னொருத்தியின் மடியில் தன் சிசுவைக் கிடத்திவிட்டு நெடு மூச்செறிந்தாள்.

அவ்விதயங்களிலிருந்து எழுந்த பெருமூச்சு காற்றிடையே கலந்தது!

**நன்றி: வார்ஷிரி**

**தமிழில்: சரஸ்வதி ராம்னாத்.**

# வேரில்லாத மரங்கள்

16

குழந்தையை மார்போடு அணைத்து, இடது கையால் முட்டுக் கொடுத்து, வலக் கையால் புடவையை இழுத்து விட்டுக் கொண்டாள் வசந்தா.

முட்டி மோதிக் கொண்டு குழந்தை பால் குடிக்க, மெல்ல அதன் கை, கால்களை தடவிக் கொடுத்தாள்.

மிருதுவாக, பட்டுத்துணியின் வழுவழுப்போடு வெளிர் சிவப்பாக இருந்தது குழந்தை.

'பொறக்கறப்ப சிவப்பா இருக்கற குழந்தை, பெரிசானதும் கறுத்திடுமாம்... வெள்ளையாவோ, ரோஸாவோ இருந்தாத்தான் நிஜமாவே சிவப்பா வளருமாம்... ஏதோ புஸ்தகத்துல படிச்சேன் வசு...' என்று மாதவன் சொன்னது நினைவுக்கு வந்தது.

கூடவே, யாரோ பாங்கில் சொன்னார்கள் என்று யானை விலை கொடுத்து, நாலு சிட்டிகை அளவு குங்குமப்பூ கொண்ட பாட்டிலை வாங்கி வந்து, "தெனைக்கும் பால்ல கலந்து குடிச்சா, கொழந்தை ரோஜாப்பூ நிறத்துல பொறக்குமாம், வசு... செஞ்சுதான் பாப்பமே" என்று கூறியதோடு நிற்காமல், ராத்திரி ஒரு நாளைப் போல தவறாமல் 'குங்குமப்பூ பால் குடிச்சியா?' என்று கேட்டதையும் நினைத்துப் பார்த்த போது அந்தக் கரிசனமும், அன்பும் ஒருவித பெருமிதம் கலந்த புன்னகையை உதட்டில் தவழச் செய்தது...

குனிந்து குழந்தையை ஒரு தரம் உன்னிப்பாக பார்த்தாள்.

எப்படி இருந்தாலும் 'காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு' என்கிற பழமொழியை நிஜமாக்குவதாய் இவர்களுக்கு உசத்தியாய்த்தான் இருக்கப் போகிறது.

பால் சுரக்கும் வேகத்திலேயே நெஞ்சுக்குள் தாய்ப்பாசமும் பொங்கிட, வாஞ்சையுடன் பிள்ளையை உயர்த்தி, குஞ்சுப் பாதங்களில் மென்மையாய் முத்தமிட்டாள்.

இது சிவப்பாகுமா, கறுப்பாகுமா என்று கணிக்க முடியவில்லை.

ஆண் குழந்தை ரொம்பச் சிவப்பாக இருக்க வேண்டியதில்லை. ஆண், மாநிறமாக இருந்தால்தான், அந்த ஆண்மையின் கம்பீரம் பளீரென்று வெளிப்படுகிறது, மாது மாதிரி...

"என்ன வசு, குழந்தையப் பாத்து நீயே சிரிச்சுக்கறே? அதுக்குள்ள அது ஜோக் கடிக்க ஆரம்பிச்சிடுச்சா என்ன?"

வசந்தா புன்னகை மாறாமல் நிமிர்ந்தாள்.

"இல்லே மாது, இப்பத்தான் குழந்தைய நல்லாப் பாக்கறேன்... ரெண்டு நாளா அத்தம்மா கூடவே இருந்தாங்களா, கொஞ்சம் அழுத்தமாப் பார்த்தாக்கூட 'கண்ணு பட்டுடும்'னிட்டு வாங்கித் தொட்டில்ல விட்டுடுவாங்க... இப்பக்கூட என்னமோ மனசாகாமத்தான் வீட்டுக்குப் போயிருக்காங்க..."

மாதவன் அவள் பக்கத்தில் கட்டிலில் உட்கார்ந்தான்.

"அவங்க பேசாம இன்னிக்கும் இங்கயே இருந்திருக்கலாம். நான் போய் சாப்பாடு எடுத்திட்டு வந்திருப்பேன் இல்லே..."

"உங்களுக்கு என்ன மாது சமைக்கத் தெரியும்? ஏதோ, நம்ப பக்கத்துப் போர்ஷன்காரங்க ரெண்டு நாளும் பத்தியமாச் சாப்பாடு செய்து கொடுத்ததக் கொண்டு சமாளிச்சிட்டோம்.... பிள்ளை பிறந்து மூணு நாளாவுது. இன்னையிலிருந்து கருவாட்டுக் குழம்பு கொடுக்கறது வழக்கமாம்; அப்பத்தான் பால் நல்லாச் சுரக்கும்னிட்டு அத்தம்மாவே சமைக்கப் போயிருக்காங்க... அத விடுங்க, டாக்டரப் பாத்தீங்களா? என்ன சொன்னாங்க?"

"ம், பாத்தேன்... 'சுகப்பிரசவம்தானே, அஞ்சாம் நாள் தாராளமா டிஸ்சார்ஜ் பண்ணி வீட்டுக்கு அழைச்சிட்டுப் போயிடலாம்'னு சொன்னாங்க... நாளைக்கே பணத்தக் கட்டி பில் செட்டில் பண்ணிட்டம்னா, மறுநாளு காலையிலே டாக்ஸி வெச்சி வீட்டுக்குப் போயிடலாம்..."

பேசிக் கொண்டே போனவன், சாப்பாட்டுக் கூடையுடன் பரிமளம் வருவதைப் பார்த்து சடக்கென்று எழுந்து, சற்று தள்ளியிருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டான்.

காரியரையும், ஃப்ளாஸ்கையும் மேஜை மேல் வைத்த பரிமளம், கூடையிலிருந்து இன்லாண்ட் கடிதம் ஒன்றை எடுத்து மாதவனிடம் நீட்டினார்.

"காலைல முதல் தபால்ல வந்துச்சு... நீங்க இங்கிருந்து நேரா ஆபீஸ் போயிடுவீங்களேனுதான் இங்கயே கொணாந்திட்டேன்..."

கடிதம் காஞ்சிபுரத்திலிருந்து வந்திருந்தது.

"அட, அப்பாகிட்டயிருந்து! குழந்தை

சிவசங்கரி



பிறந்திருக்கிறதைக் குறிப்பிட்டு, நாம குடுத்த தந்தி கிடைச்சு, உடனே மறுதபால்ல லெட்டர் எழுதியிருக்காங்க போல!'' என்று ஆரம்பித்தவனின் மகிழ்ச்சி, கடிதத்தைப் படித்து முடித்த போது இன்னும் கூடியிருந்தது.

''பார்த்தியா வசு, நான் சொன்னேனில்லே! உடனே பேரனைப் பார்க்கணும்னு ரொம்பச் சந்தோஷத்தோட எழுதியிருக்காங்க!''

அவன் சந்தோஷம் தன்னையும் தொற்றிக் கொண்ட மாதிரி வசந்தா கண்ணகலச் சிரித்து, ''பின்னே? அருமை பெருமையாப் பொறந்திருக்கிற பேரன் இல்லியா், வராம? எப்ப வர்றாங்களாம்? அதை எழுதியிருக்காங்களா?'' என, மாதவன் உதட்டைப் பிதுக்கினான்.

''இல்லே... ஊர்ல திருவிழா நடக்குதாம்... அப்பா முன்னால நின்னு நடத்தி வைக்கப் பொறுப்பு எடுத்துக்கிட்டு இருக்கிறதால, ஊரை விட்டு நகர முடியாதபடி வேலை நிறைய இருக்குதாம். அதான், 'நான் வராட்டி என்ன, நீ ஒரு நடை வந்து அம்மாவை அழைச்சுக்கிட்டுப் போயேன், நான் அடுத்த வாரம் தொட்டிலுக்கு வந்துக்கறேன்'னு எழுதியிருக்காரு... அம்மாவுக்குப் பேரனைப் பார்த்தே ஆகணுமாம்!'' பெருமையோடு அவன் பேசியதைக் காதில் வாங்காமல் வசந்தா அத்தையை ஏறிட்டு விழித்தாள். அரை நிமிட மௌனத்துக்குப் பின் தயக்கமாய், ''நீங்க போகப் போறீங்களா?'' என்றாள்.

''பின்னே? அதுவும், அம்மா இவ்வளவு ஆசையாப் பார்க்கணும்னு சொல்றப்ப, போகாம இருக்க முடியுமா? நாளை மறுநாள் டிஸ்சார்ஜ் பண்ணி உன்னையும் குழந்தையையும் வீட்டுல சேர்த்திட்டேன்னா, அப்புறம் போய் அம்மாவைக் கூட்டிக்கிட்டு வந்திடலாம்... என்ன, சரிதானே?''

மாதவன் பரவசத்தோடு அந்தக் கடிதத்தையே பார்த்துக் கொண்டிருக்க, வசந்தா ஏதோ சொல்ல நினைத்தது போல வாயைத் திறந்துவிட்டு, அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு கொஞ்ச நேரம் சும்மா இருந்தாள். மறுபடியும் அவள் பேசிய போது குரல் மெள்ள வெளியானது.

''மாது...!''

''என்ன?''

''உங்கம்மா இப்ப இங்கே வந்துதான் ஆகணுமா?''

**எ**ன்ன கேள்வி இது என்கிற தினுசில் மாதவன் ஆச்சர்யமாய்ப் பார்க்க, வசந்தா அவசரமாய்த் தொடர்ந்தாள்.

''இல்லே... வந்து... ரெண்டு மாசம் பொறுத்துக்கிட்டாங்கன்னா, நாமளே குழந்தையைத் தூக்கிக்கிட்டுப் போய்க் காட்டிட்டு வரலாமேன்னுதான் கேக்கறேன்!''

மாதவன் அதிர்ந்து போனது வெளிப்படையாய்த் தெரிந்தது.

''ஏ... என்னது? ரெண்டு மாசம் பொறுத்து நாம போய் வரலாமா? ஏன்? இப்ப வந்தா என்ன?''

''எதுக்காகஇப்பப்பதறுறீங்க...கொஞ்சம் நிதானமா நான் சொல்றதைக் கேளுங்களேன்... நாம இருக்கிற வீடு ரொம்பச் சின்னது மாது... பெட்ரூம்ல குழந்தையோட நான் இருந்துக்கிட்டா, அத்தம்மாதான் எனக்கு உதவியா பெட்ரூமுக்கும் சமையலறைக்குமா போயிட்டு வந்திட்டு இருப்பாங்க... உங்கம்மா வந்தாங்கன்னு எங்க தங்க வெக்கிறதுன்னுதான் யோசனையா இருக்கு... உடம்புக்கு முடியாதவங்க... இப்பத்தான் கெடந்து பொழைச்சிருக்காங்க... அவங்க ஆசைப்படறாங்கன்றதுக்காக நாம கொடுக்க வேண்டிய மரியாதையைக் கொடுக்காட்டி எப்படி...?''

அவன் முடிப்பதற்குள் பரிமளம் குறுக்கிட்டு. ''அது மட்டுமில்ல... பழக்க வழக்கம்னு ஒண்ணு...'' என்று முடிக்க, மாது கோபமாகப் பேசினான்.

''பழக்க வழக்கமெல்லாம்தான் நமக்கு ஒண்ணும் கிடையாதுன்னு தெரியுமில்லே! அப்படி சாஸ்திர சம்பிரதாயம் பார்க்கிறதானா, மருமகளையும் பேரனையும் நல்ல நாளு பார்த்துச் சம்பந்திங்க கொண்டு விட்ட பிறகில்லே எங்கம்மா பார்க்கணும்! இப்ப எந்த மரியாதையும் எதிர் பார்க்காம, தானே வர்றதாத்தானே சொல்றாங்க?''

''அதுக்கில்ல மாது...!''

''ப்ச்...சும்மா பேசிக்கிட்டே போகாதே வசு... இப்ப என்னதான் சொல்ற, எங்கம்மாவைக் கூட்டிக்கிட்டு வர நான் போக வேணாம்னு?''

''ஐயோ சாமி, என்ன சொல்லிட்டம்னு இப்படி மூக்கு மேல கோபம் வரப் பேசறீங்க... வசதியானவங்களை, நல்லபடியா கவனிச்சுக்கணுமேன்ற ஆர்வத்துல பேசறதைப் புரிஞ்சிக்காம...''

பேசியது போதும் என்கிற மாதிரி மாதவன் பதில் கூறாமல் எழுந்து நின்றான்.

கோப, தாப, மனஸ்தாபங்களை மறந்து விட்டு அம்மா தானாக வருகிறேன் என்னும் போது, மனம் நிறைந்த சந்தோஷத்தோடு வரவேற்காமல், மனைவியும் அத்தையும் முட்டுக்கட்டை போடுகிற மாதிரி



தோன்ற, ஜன்னலருகில் சென்று 'க்ரீச்... க்ரீச்' என்று வாலைத் தூக்கியபடி தோட்டத்தில் விளையாடும் அணில்களை வெறித்தான்.

வீடு சின்னதாக இருக்கலாம், வசதி இல்லாமல் போகலாம்...

ஆனாலும்?

அம்மா வீட்டுக்காக வருகிறாளா, அல்லது மனுஷாளுக்காக வருகிறாளா?

இதை வசுவால்தான் புரிந்து கொள்ள முடியவில்லை என்றால், வயசில் பெரியவரான அத்தையாலும் கூடவா?

இரண்டு நிமிடம் போல யோசனையுடன் நின்றவன் திரும்பி, அவர்களைப் பார்த்துப் பேசத் தொடங்கியபோது, கோபம் குறையாமலேயே இருந்தது.

"நீ நல்லதுக்கே சொன்னாலும், அது நியாயமா எனக்குப் படல... வர்றேன்னு ஆசைப் படறவங்களை, அதை இதைச் சொல்லித் தடுக்கறது வேண்டாத சாக்குச் சொல்ற மாதிரி படும்... வேணும், நான் உன்னை வீட்டுல விட்டப்புறம் புறப்பட்டுப் போய் அவங்களைக் கூட்டிக்கிட்டுத்தான் வரப் போறேன். அரை நாளோ, ஒரு நாளோ தங்கிட்டுப் போகட்டும்... அப்புறம் வேணா, இன்னும் வசதியான வீடாப் பார்த்து மாத்திக்கிட்டுப் போனப்புறம் நாள் கணக்குல வந்து தங்கச் சொல்லலாம்..."

பேசியவன், இதுதான் என் முடிவு, இதை மாற்றப் போவதில்லை என்பது போல "அப்ப நான் வர்றேன், நாழியாச்சு..." என்று முணுமுணுத்தவாறு வெளியேறினான்.

திட்டமிட்டபடி ஆஸ்பத்திரியிலிருந்து வசந்தாவையும் குழந்தையையும் வீட்டில் கொண்டு விட்ட அதே தினமே காஞ்சிபுரம் புறப்பட்டுப் போன மாதவன், மறுநாள் காலை திரும்பி வரும்போது தனியாகவே வந்தான்.

ஆஸ்பத்திரியில் அத்தனை தீர்மானமாகப் பேசிய பிறகு, இரண்டு நாளும் அதிகம் பேசாமல் இருந்தவன், தொடர்ந்து இப்போதும் மௌன சாமியாராக நிற்க, ரோஷத்தை விட்டு விட்டு, "என்ன மாது, அம்மா வரலியா?" என்றாள் வசந்தா.

மாதவன் சுள்ளென்று விழுந்தான்.

"ரெண்டு நாளா அம்மாக்குக் காய்ச்சலா இருக்காம்... முக்கி முனகிக்கிட்டுப் படுத்திருக்காங்க... 'பேராண்டியைப் பார்க்கணும்கிற ஆசைகூட நடக்க மாட்டேங்குதே தம்பி'ன்னு அழுதாங்க... இப்பப் பார்க்காட்டி என்னம்மா, பத்து நாள் கழிச்சுப் பார்த்துக்கலாம்னு சமாதானம் சொல்லிட்டு வந்தேன். அம்மா வர முடியாமப் படுத்திட்டதுல உனக்குத் திருப்திதானே?"

அம்மா நினைத்த நினைப்பில் தன் பிள்ளையைப் பார்க்க வர முடியாது போன வருத்தத்தைப் புரிந்து கொள்ள முடிய, வசந்தா பரிவோடு அவன் கையை எட்டிப் பிடித்துக் கொண்டாள்.

"கொஞ்ச நாள்தானே மாது... அப்புறம், அவங்களுக்கு எப்ப பேரனைப் பார்க்கணுமோ அப்பல்லாம் நாமளே காஞ்சிபுரம் போய்ட்டா போவுது!"

மாதவன் குழப்பத்தோடு கண்களை இடுக்கிக் கொண்டான்.

"நாமளே போறதா? அப்பகூன்னு, அது வரைக்கும் குழந்தையை எங்கம்மா பார்க்கவே வேணுமா? இல்லே, பார்க்காமதான் இருக்க முடியுமா? எப்படியும் தொட்டில் போடறப்ப அவங்க வந்துதானே ஆகணும்?"

இப்போதைக்குப் பேச வேண்டாம் என்று இரண்டு நாட்களுக்கு முன்பு செய்து கொண்ட வைராக்கியம் காற்றில் பறக்க, வசந்தா, "தொட்டிலா?" என்றாள் அழுத்தமாய்.

"ம். பேரனைத் தொட்டில்ல போடறப்ப பாட்டி இல்லாட்டி எப்படி?"

"இப்பயாரு தொட்டில்போடப்போறாங்க மாது? அன்னிக்கே ஒரு தரம் சொன்னீங்க... சரி, இப்ப கேக்க வேணாம்னு இருந்திட்டேன். என்ன பேசறீங்க, எனக்குப் புரியலையே!"

மாதவன் எரிச்சலாய்ச் சூள் கொட்டினான்.

"குதர்க்கமாப் பேசாதே வசு! குழந்தையைத் தொட்டில்ல விட்டு, அதுக்குக் கீழ நெல்லு பரப்பி, அதுல பேர் எழுதறதுதான் சம்பிரதாயம். அன்னைக்குத்தான் ஊர் முழுக்க அழைச்சுக் குழந்தையக் காட்டுவாங்க... தெரியும்தானே! என்னமோ சந்திர மண்டலத்துல வசிக்கறவங்க செய்யற ஒரு காரியத்தைப் பத்திப் பேசற மாதிரி நூறு கேள்வி கேக்கறியே?"

வசந்தா பரபரப்பாய்க் கேட்டாள்.

"எப்ப வரப் போறாங்க?"

"குழந்தை பிறந்து பதினொருவது நாள் தான் தொட்டில் போடுவாங்க. அன்னிக்குத் தான் வருவாங்க...."

"பதினொருவது நாளா? அத்தம்மா நேத்து தான் சொல்லிக்கிட்டிருந்தாங்க, 'பதினொருவது நாள் சர்ச்சுக்கு எடுத்திட்டுப் போய் ஞானஸ்நானம் செய்யணும்'னிட்டு!"

இந்த முறை மாதவன் உடல் குலுங்க அதிர்ந்தான்.

"ஞானஸ்நானமா? சர்ச்லியா?"

வசந்தா இறுக்கமாக முகத்தை வைத்துக் கொண்டாள்.

"பெரியவங்க..." என்று ஏதோ ஆரம்பித்த மாதவனைப் பேச விடாமல், "எல்லாரும் பெரியவங்கதான்! எந்த முடிவு சொன்னாலும் ரெண்டு பேருக்கும் பொதுவா இருக்கற மாதிரி சொல்லுங்க..." என்று அதட்டலாய்க் கூறியவள், பிள்ளையை அழ அழப் படுக்கையில் கிடத்திவிட்டுத் திரும்பிப் படுத்துக் கொள்ள, மாதவன் கோபமாக எழுந்து கதவை உதைத்துக் கொண்டு வாசலுக்குப் போக, அதுவும் இதுவுமாய் ஆயிரம் பேசி ஜோடித்து, எவரும் எதற்கும் ஒப்புக் கொள்ளாமல் போனதில், எந்தக் கோயிலுக்கும் போகாமல் எந்தச் சர்ச்சுக்கும் போகாமல், குழந்தைக்கு எந்தப் பெயருமேகூட இடப்படாமல் போனதுதான் கடைசியில் நடந்தது.

(தொடரும்)

சேலம் மாவட்டம் ரீ — விசிட்:

# "கொஞ்சம் அவகாசம் கொடுங்கள்; குறைகளைத் தீர்த்து விடுகிறோம்"

சேலம் மாவட்டச் சுற்றுப்பயணம் மேற்கொண்ட பிறகு, சென்ற வருடம் மார்ச் மாதம் மாவட்ட ஆட்சித் தலைவரைப் பேட்டி கண்டு, குறைகளையும் பிரச்னைகளையும் வெளியிட்டிருந்தோம் அல்லவா? அவை எந்த அளவுக்குத் தீர்க்கப்பட்டிருக்கின்றன என்று அறிய சேலம் மாவட்டத்துக்கு மறுவிஜயம் செய்தோம்:

அதற்கு முன், வாசகர்களிடமிருந்து வந்த சில கடிதங்களைப் பார்ப்போம்:

•• திருச்செங்கோடு கூட்டப்பள்ளி காலனியைச் சேர்ந்த வி. வெங்கடேசன், தீர்க்கப்பட்ட பிரச்னைகள் சிலவற்றை எழுதியிருக்கிறார்: "மின் சப்ளை, நாங்கள் கேட்டபடி திருச்செங்கோட்டுடன் இணைக்கப்பட்டுள்ளது. குடிநீர், ஒரு நாள் விட்டு ஒரு நாள் வந்து கொண்டிருக்கிறது. இராஜம்மாள் என்பவருக்கு மணியார்டரில் ஏற்பட்ட குளறுபடி, கல்கியில் வந்த மறுதினமே புகார் ஆய்வாளரால் விசாரிக்கப்பட்டுள்ளது. மேலும் இரண்டு மாதத்துக்கு ஒருமுறை நேரில் வந்து தபால் பட்டுவாடாவிலும், மணியார்டரிலும் குறைகள் உள்ளனவா என்று விசாரிக்கிறார். தெரு விளக்குகள் அனைத்தும் போடப்பட்டுள்ளன. ராணி என்பவருக்கு, சிறு சேமிப்புக்காகக் கொடுக்கப்படும் கமிஷனும், தனி விண்ணப்பமும் முறையாகக் கிடைக்கின்றன. ஹவுசிங் போர்டு, இடிந்த வீடுகளைச் சரி செய்து வருகிறது.

•• ஜலகண்டபுரம் எம். பழனிவேல்: "மருத்துவமனைக்குச் சுற்றுச் சுவர், மற்றும் பிரேதப் பரிசோதனை அறை கட்ட, வேலையை ஆரம்பித்து விட்டார்கள். பெத்த முன் ஊசி போட்டுக் கொண்டு வேலை பார்த்த பெண் மருத்துவரையும் மாற்றி விட்டார்கள்."





* பழனிவேல்

* தங்கவேலு

•• காட்டூர் எஸ். அருள்மொழி: "சேலம் வேலை வாய்ப்பு அலுவலகத்தில், உடல் ஊனமுற்றோர் பிரிவின் சிறப்பு இளநிலை வேலை வாய்ப்பு அலுவலர் எஸ். நடேசன் மூலம் இந்தியன் வங்கி ஏழாயிரம் ரூபாய் கடனுதவி அளித்தது."

மேலே கண்டவை, தீர்க்கப்பட்ட பிரச்னைகள். தீர்க்கப்படாதவை குறித்தும் இவர்கள் எழுதியிருந்த குறைகளை நேரில் கண்டறிய ரீ — விசிட் உதவியது. திருச்செங்கோடு கூட்டப்பள்ளி காலனிக்கான கோவில் நிலத்துக்கு நகர்மன்ற அனுமதி கிடைக்கவில்லை. சுடுகாட்டுக்கான இடம் கிடைக்கவில்லை. காலனிக்கென்று தபால்



* தேன் தமிழ்



* செல்வி அருள்மொழி: கடன் கிடைத்துவிட்டது.

நிலையம் தரப்படவில்லை. சாக்கடைகள் சுத்தப்படுத்தப்படாமல், இருப்பதால் வீட்டின் முன்பு தேங்கிக்கிடக்கிறது. (இப்போது மண்ணையெல்லாம் சில இடங்களில் எடுத்து வருகிறார்கள்.)

தபால் நிலையத்தைப் பொறுத்தவரை சப்– போஸ்ட் ஆபீஸ் தருகிறோம் என்றார்களாம். முழுத் தபால் நிலையம்தான் வேண்டும் என்கின்றனர் காலனிவாசிகள். ''84 ல் உத்தரவிட்டும் சிக்கன நடவடிக்கை காரணமாக நிறுத்தி விட்டார்கள்!'' என்கிறார் பி. செல்வராஜ். மேலும் ''தியேட்டருக்கு, பள்ளிக்கூடத்துக்கு, கோயிலுக்கு எல்லாத்துக்கும் ஹவுசிங் போர்டு இடம் ஒதுக்கியிருக்கிறது. ஆனால் நடவடிக்கை எடுக்காமல் இருக்கிறார்கள்'' என்றார் அவர்.

அது பற்றி நாம் பலரையும் விசாரித்த போது, தனிப்பட்ட பிரச்னைகள் கட்சிப் பிரச்னையாகிவிட்டன, அவ்வளவுதான் – என்று வருத்தப்பட்டார்கள். பொதுவான பிரச்னைகளில் – அரசு தலையிட்டுச் சீர் செய்யத் தேவையில்லாதவற்றில், பாதிக்கப்பட்ட மக்களே கட்சிப் பாகுபாடுகளில் சிக்கிக் கொள்ளாமல் பொது நலனைக் கருதிச் செயல்பட்டால் எத்தனை நன்றாக இருக்கும்!

**ஜ**லகண்டபுரம் மருத்துவமனைக்குச் சென்றபோது, மருத்துவர் யாரும் இருக்கவில்லை. ஆனால் சீஃப் பார்மஸிஸ்ட் ஜெகந்நாதனும், பார்மஸிஸ்ட் பத்மாவும் நோயாளிகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஆபரேஷன் தியேட்டரில் ஏர்கண்டிஷனர் பொருத்தப்பட்டு, வசதியாக குடும்பக் கட்டுப்பாட்டு அறுவை சிகிச்சைக்கு உபயோகப்பட்டு வருகிறது.

''மற்ற ஆபரேஷன்கள் செய்ய அனஸ்தடிஸ்ட் தேவை; தியேட்டர் ஸ்டாஃப் நர்ஸ் தேவை'' என்றனர் பொது மக்கள். காம்பவுண்டுச் சுவர் எழுப்ப, குழி தோண்டப்பட்டு, இடைஞ்சலாக இருந்த மரங்கள் அகற்றப்பட்டிருந்தும் சுவர் எழுப்பப்படாமல் இருந்தது. மரம் ஏலம் விடப்பட்டு விட்டதாம்! ''காம்பவுண்டுச் சுவர் பற்றி பி.டபிள்யூ.டி.யைத்தான் கேட்க வேண்டும்'' என்றார்கள்.

இது தவிர முக்கியமான பிரச்னையாக ஜலகண்டபுரம் பழனிவேல் குறிப்பிட்டிருந்த மருத்துவமனையை ஒட்டியுள்ள பொதுக் கழிப்பறை தாங்க முடியாத துர்நாற்றத்துடன், சுற்றிலும் வசிக்கும் மக்களுடைய நாசிக்குச் சவால் விடுகிற மாதிரி காட்சி அளிக்கிறது. ஊருக்கு உள்ளேயே நடு வீதியில் சாக்கடை பாய்ந்து ஓடுகிறது! இவைபற்றி பஞ்சாயத்து யூனியன் தலைவர் ரகுநாதனையும், சுகாதார அலுவலர் நாச்சியப்பனையும் சந்தித்துப் பேசியதில், சரி செய்து விடுவதாகக் கூறினார்கள். கழிப்பறையை ரிப்பேர் செய்து, தினசரி தண்ணீர் விட்டுக் கழுவிச் சுத்தம் செய்துவிட ஏற்பாடு செய்து விடுவதாகவும் கூறினர்.

**கா**ட்டூர் அருள்மொழியைச் சந்தித்த போது. தமக்கு இந்தியன் வங்கி கடன் அளிக்கக் காரணமாயிருந்த நடேசன், கவுன்சிலர் கீதா தேவமணி, ரங்கராஜன் குமாரமங்கலம் எம்.பி., இவர்களோடு சமூக நலத் துறையையும் குறிப்பிட்டார். கடனுக்கு வட்டி விகிதம் பன்னிரண்டு சதவீதம் அதிகச் சுமையாக இருப்பதாகவும், சலுகை வட்டி நான்கு சதவீதமாக இருந்தால் வசதியாயிருக்கும் என்றும் தெரிவித்தார். வேலை வாய்ப்பு அலுவலக அதிகாரி நடேசன், மாநில சமூக நலத்துறை, அருள்மொழிக்கு மானியமாகக் கொடுத்த ஐந்நூறு ரூபாயை அவர் திருப்பிக் கொடுத்து விட்டால் வட்டி குறைப்பு சாத்தியமாகுமா என்று தாம் விசாரித்து வருவதாகச் சொன்னார். ஆக, அருள்மொழிக்குக் கடனுதவி கிடைத்து அவர் ஓரளவு வசதியுடன் வாழ்வதைக் காண மகிழ்ச்சியாக இருந்தது!



கூட்டப்பள்ளி காலனி: பழுது பார்க்கப்படுகிறது.

**தா**ரமங்கலம் கைத்தறி நெசவாளர் காலனிக்குச் சென்றபோது, நிலைமை கிட்டத்தட்ட அப்படியேதான் (பாவுகளைத் தனிப்பட்ட முதலாளிகளிடமிருந்து பெறுவது) இருப்பதாகப்பட்டது. ஆனாலும் அவர்கள் முக்கியப் பிரச்னையாகக் குறிப்பிட்டது தண்ணீர் வசதிக்காக ஒரு போர்வெல்; வெளியே வேலைக்குப் போய் விட்டு இரவில் திரும்பும் குழந்தைகளுக்குத் தெருவிளக்கு வெளிச்சம் ஆகியவை. நெசவாளர் கூட்டுறவுச் சங்க அலுவலர்களைச் சந்தித்த போது, ஹெட் கோவிலிருந்து மானியமாக ஜூலை 87ல் 1,52,000 ரூபாய் வந்து விட்டதாகவும், உறுப்பினர்களும் 'நம் மேலும் தவறு இருக்கிறது' என்று உணர்ந்து கிட்டத்தட்ட நாற்பதாயிரம் ரூபாய் வரை கட்டியிருக்கிறார்கள் என்றும் தெரிவித்தனர். 68 குடும்பங்களுக்கான எம்.ஜி.ஆர். நகர் நெசவாளர் காலனியில் உள்ள கிணற்றைச் செப்பனிட்டு, கைப்பிடிச் சுவரும் கட்டி பம்ப்பும் வைத்து விடுவதாகச் சொன்னார்கள். இதற்காகப் பத்தாயிரம் ரூபாய் சாங்க்ஷன் ஆகியிருப்பதாகத் தெரிவித்தனர், தங்கவேலுவும், கணேசனும். பாவுகளைச் சங்கத்திலிருந்தே பெறும் நிலையும் விரைவிலேயே வரும் என்று எதிர்பார்ப்போம்!



• எம். ஜி. ஆர். நகர் நெசவாளர் காலனி: பாதிக்குப் பாதி பிரச்னை தீர்ந்தது!



• காசி விசுவநாதன்: பாராட்டு!



• ஜலகண்டபுரம் மருத்துவமனை: காம்பவுண்டுச் சுவர் கட்டப்படுமா?

**சே**லம் மாவட்டத்தின் தற்போதைய கலெக்டர் பாரூக்கி சமீபத்தில்தான் பொறுப்பேற்றிருக்கிறார். முதலில் பிரச்னைகள் எல்லாவற்றையும் தீர விசாரித்து அறிந்து கொள்ளும் நோக்கோடு அவகாசம் கேட்டாலும், பிறகு பெருந்தன்மையுடன் அன்றைய தினமே பேட்டிக்கு ஒப்புக் கொண்டார். அவர் முன்பு வைக்கப்படவிருக்கும் பிரச்னைகள், புகார்கள், குறைகள் ஆகியவை பற்றி, அன்று மாலையே பேட்டிக்குத் தயாராயிருக்க வேண்டும் என்று தம் உதவியாளர்களையும் முடுக்கி விட்டார். இதில் மக்கள் தொடர்பு அதிகாரி கிருஷ்ணன் எடுத்துக் கொண்ட முயற்சிகளை நாம் பாராட்ட வேண்டும். மாலை ஆறு மணிக்கு பேட்டி துவங்கியது:

''பஸ் ஸ்டாண்டு பிரச்னை தீர்ந்தபாடில்லையே? 84ல் அச்சுவானேரியில் எம். ஜி. ஆர். அடிக்கல் நாட்டியும், புது பஸ் ஸ்டாண்டு ஏன் இன்னும் கட்டப்படவில்லை?'' — இது நாம்.

''இது சம்பந்தமான வேலைகளைத் துவக்கி விட்டோம். அண்ணா போக்குவரத்துக் கழகம் பத்து லட்ச ரூபாய் வரை செலவழித்திருக்கிறது... கூடிய விரைவில் இது சுமுகமாகத் தீர்க்கப்பட்டு விடும்.'' — பதில் சொல்ல ஆரம்பித்தார் கலெக்டர்.

''பஸ்களில் அடிக்கப்படும் ஏர்–ஹாரன் சப்தம் காதைக் கிழிக்கிறது!''

''சென்ற போக்குவரத்து கமிட்டி மீட்டிங்கில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டு, அண்ணா டிரான்ஸ்போர்ட் டவுன் பஸ்களில் மட்டும் ஏர்ஹாரன் அகற்றப்பட்டு விட்டது. தவிர, இம்மாதிரி விஷயங்களில் மக்களின் அபிப்ராயத்தை ஏசோபித்து எடுத்துரைத்து, தியேட்டர்களில் ஸ்லைடுகள் காண்பித்து, தேவைப்பட்டால் சட்ட நடவடிக்கையும் எடுத்துக் கட்டுப்படுத்தி விடலாம்.''

''மீட்டர் இருந்தும் அநியாயமாக வாடகை கேட்கிறார்கள் ஆட்டோ ரிக்ஷாக்காரர்கள்.''

''நகரின் குறிப்பிட்ட பகுதிகளுக்கு, புறப்படும் இடத்திலிருந்து இன்ன கட்டணம் என்று சீர் செய்ய முடியும். இதை அமல் செய்யப் பார்க்கிறோம்.''

''சினிமா தியேட்டர்களில் ஏ.ஸி. போடாமல் இருக்கிறார்கள். ஆனால் அதற்கான கட்டணத்தைத் திருப்பித் தருவதில்லை. சுகாதாரம் சுத்த மோசம்!''

''அவ்வப்போது இம்மாதிரி குறைகளுக்குத் தண்டனை வழங்கியும், லைசென்ஸ் ரத்து செய்து நடவடிக்கைகள் எடுத்தும் வருகிறோம்.''

''உங்கள் வீட்டு வளாகத்திலுள்ள காலனியில் குடியிருப்போர், புதூர் செல்லும் பாதை பாதுகாப்பானதாக இல்லை...''

''பாதுகாப்பானதாக ஆக்குகிறேன். அதற்கான வசதிகளைச் செய்கிறேன்.''

''பொங்கல் பரிசாக அரசு கொடுக்கும் முந்நூறு ரூபாய் (இவ்வருடம் 350 ரூபாய்) பஞ்சாயத்து யூனியன்களிலுள்ள துப்புரவுத் தொழிலாளர்களுக்கு முழுதும் போய்ச் சேருவதில்லை. சில தலைவர்கள் நூறு ரூபாய் பிடித்துக் கொண்டு விடுகிறார்களாம்...''

''இம்முறை அது மாதிரி நடக்காமல் கவனிக்கிறேன்.''

''அரசு மருத்துவமனைக்கு அருகே மேம்பாலம் அவசியம் தேவை.''

''பணி ஆரம்பிக்கப்பட்டு நடைபெற்று வருகிறது. (ரங்கராஜன் குமாரமங்கலம் ராஜீவ் காந்தியைக் கூட்டிக் கொண்டு வந்து அடிக்கல் நாட்டி, வேலை நடந்து வருகிறது என்று குமாரமங்கலத்தின் உதவியாளர் சிதம்பரம் காண்பித்தார்.) இந்தப் பணி ரயில்வேயினால் ஆக வேண்டியது, ஹைவேஸ் துறையினால் ஆக வேண்டியது என்று இரண்டாகப் பிரிக்கப்பட்டு, ரயில்வே தனது வேலையைத் தொடங்கி விட்டது. ஹைவேஸ் துறை டெக்னிகல் எஸ்டிமேட் தயாரித்து வருகிறது.''

''ஐந்துரோடு சந்திப்பில் தியாகிகள் நினைவுச் சின்னத்தில் ஆளும் கட்சிக் கொடி பறக்கலாமா?''

''விரைவிலேயே சர்வ கட்சிக் கூட்டம் கூட்டி, எல்லோருக்கும் பொதுவான சட்டதிட்டங்களை உருவாக்கி, ஒழுங்கு, விதிமுறைகளை மீறாமல் பார்த்துக் கொள்கி



* பாருக்கி: புது கலெக்டர்.

றேன்.''

''நாமக்கல்லில் கால்நடை மருத்துவக் கல்லூரிக்கான நில ஆர்ஜிதம் பற்றி என்ன முடிவு எடுத்தீர்கள்?''

''அதற்குத் தேவைப்பட்ட நிலத்தின் அளவை அறுநூறு ஏக்கரிலிருந்து முந்நூறு ஏக்கராகக் குறைத்து விட்டோம். உபயோக மற்றது என்று கருதப்பட்ட நிலத்தை விட்டு விட்டோம். வேலை வேகமாக நடைபெற்று வருகிறது.''

''ஜலகண்டபுரம் மருத்துவமனைக்கருகே உள்ள பெண்கள் டாய்லெட் மிக துர்நாற்றத்தை வீசிக்கொண்டு, அருகே வசிப்பவர்களுக்கும், மருத்துவமனைக்கும் அவஸ்தையாக இருக்கிறது. காம்பவுண்டு சுவருக்குக் குழி தோண்டியும் சுவர் கட்டப்படவே இல்லை...''

''நடவடிக்கை எடுக்கிறேன்.''

''மேட்டூர் தாலுகா மங்காளூர் கிராமம் செ. இராசு, மூன்று நாள் தாமதமாக விண்ணப்பத்துக்குப் பணம் கட்ட வந்தார் என்பதற்காக, மறுபடி புதிதாக, விண்ணப்பிக்க வேண்டும் என்கிறார்களாம் மின்வாரிய அதிகாரிகள்.''

''சீஃப் இஞ்சினியரிடம் மறுபடி மனு போக வேண்டும். மனுவிலுள்ள காரணத்தையும் தகுதியையும் ஒட்டி அது கவனிக்கப்படும்.''

''ஆத்தூருக்கு அருகே பெரிய கிருஷ்ணபுரம் பள்ளிக் கூரைக் கட்டடம் தீக்கிரையாகி, இன்னும் மரத்தடியிலேயே நடப்பதாக அறிகிறோம்...''

குறித்துக் கொண்டு, விசாரித்துத் தெரிவிக்குமாறு உதவியாளரிடம் சொல்கிறார் கலெக்டர்.

''திருச்செங்கோட்டுக்கு இரண்டாவது குடிநீர்த் திட்டம் கொண்டு வருவது என்ன ஆயிற்று?''

''முன்னேறிக் கொண்டு வருகிறது. மெதுவாக, ஆனால் நிச்சயமாக.''

''பஸ் போக்குவரத்து நெரிசல், குழப்பம் நகருக்குள் அதிகமாகத் தென்படுகிறது.''

''சிறிது மாற்றியமைக்க உத்தேசித்திருக்கிறோம். ஆனாலும், பிரச்னை முழுதும் தீர வேண்டுமானால் பஸ் ஸ்டாண்டை மாற்றினால்தான் நடக்கும்.''

— இவை தவிர, ரேஷன் கடைகளில் பாமாயிலும், மண்ணெண்ணெயும் விநியோகிப்பதில் உள்ள ஊழலை (சிவதாபுரம், ஜலகண்டபுரம், தாரமங்கலம்) விசாரிப்பதாகச் சொன்னார் கலெக்டர். ஆத்தூர் — தாண்டவராயபுரத்திலுள்ள தாய்—சேய் நல விடுதியும், ஆரம்ப சுகாதார நிலையமும் கட்டப்பட்டு இன்னும் திறக்கப்படாமல் இருப்பதை விசாரிக்க உத்தரவிட்டார். ஆதிவாசி இளநிலைப் பள்ளி ஆசிரியர் சின்னப்பெருமாளுக்கு பென்ஷன் முதலானவை வழங்காமல் இருப்பதற்கான காரணத்தை அறிய முனைந்தார். ஒலிபெருக்கித் தொல்லையைக் கட்டுப்படுத்த ஆவன செய்வதாகக் கூறினார். முதலில் பட்டா கொடுக்கப்பட்டு, பின்னர் காங்கிரஸ்காரர் ஒருவரால் அது ரத்து செய்யப்பட்டு, அவதியுறும் எம். சீனிவாசன் என்ற முன்னாள் ராணுவ வீரரின் நிலைமையை விசாரித்துச் சொல்லுவதாகக் கூறினார். ''சற்று அவகாசம் கொடுங்கள்; தீர்க்க முடிந்த பிரச்னைகளை எல்லாம் தீர்த்து வைத்து விடுகிறேன்!'' என்றார் பாருக்கி.

முடிக்கும் முன்னால் சில விஷயங்கள்:

•• சென்ற முறை கலெக்டர் பேட்டியின் போது எடுத்துச் சொல்லப்பட்ட குறைகள் சில நீக்கப்பட்டுள்ளன.

•• ஏற்காட்டில் பஸ் ஸ்டாண்டு கட்டி முடித்து விட்டார்கள்.

•• நங்கவள்ளி டவுன் பஞ்சாயத்துத் தலைவி தென்தமிழ் காந்தி நாதனைச் சந்தித்த போது, இப்போது ஆழ் குழாய்க் கிணறு போடப்பட்டிருப்பதாகவும் தண்ணீர் வருவதாகவும் குறிப்பிட்டார். காவிரி நீர் வருவதற்கு புதுத் திட்டம் போட்டு குடிநீர் வாரியம் மூலமாக நிறைவேற்றப்படும் என்று எதிர்பார்ப்பதாகச் சொன்னார்.

•• சேலம் நகரில் முன்பிருந்ததைவிட விபசாரம் மிகவும் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. (போலீஸ் எஸ். பீ. காசிவிசுவநாதனுக்குப் பாராட்டு!)

•• ராசிபுரம் திருவள்ளுவர் அரசு கலைக் கல்லூரி மாணவர்கள் எட்டுப் பேருக்கும், கொடுக்கப்படாமல் இருந்த உதவித் தொகை கொடுக்கப்பட்டு விட்டதாம்.

•• மேச்சேரி பஞ்சாயத்து யூனியனுக்குட்பட்ட பகுதிகளில் சமூக காடு வளர்ப்புத் திட்டத்தில் நடைபெற்ற ஊழலுக்குக் காரணமான அதிகாரிகள் சஸ்பெண்ட் செய்யப்பட்டார்கள் அல்லவா? அவர்கள் சஸ்பென்ஷனை இன்னும் ரத்து செய்யவில்லை! **Prevention of Tree Felling Act** சட்டப்படி மரம் வெட்டுதல் குறைந்து விட்டது மட்டுமல்ல, மரம் நடுதலும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது!

சம்பந்தப்பட்ட அத்தனை அதிகாரிகளுக்கும் நமது பாராட்டுதல்கள்!

— சாருகேசி






பிள்ளைகளைப்
போற்றிய
வள்ளல்!



கறுப்பும் வெளுப்பும்
— குழந்தைக் கவிஞர்



மீ. ப. சோமு:
— என் குழந்தைப் பருவம்

• ஏராள சிறுகதைகள் • கோகுலம் தம்பி தங்கையரின் பிருந்தாவனப் பக்கங்கள்
• அறிவியல் விஷயங்கள் • சிரிப்பு வெடிகள் • கேள்வி—பதில் • டாக்டர் பக்கம். •

# தளபதி திடமதி:






"தமிழகத்தின் தலைநகரில் தண்ணீர்ப் பஞ்சத்தைப் போக்க நாங்கள் என்ன செய்தோம் என்று கேட்கிறார்கள்! அவர்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன்... அடிகுழாயில் தண்ணீர் தந்தோம்; லாரியில் தண்ணீர் கொண்டு வந்தோம்; ரயிலில் தண்ணீர் தருவித்தோம்; கப்பலில் கூடத் தண்ணீர் வாங்கி வந்தோம்... நடப்பு ஆண்டில் ஆகாய விமானத்திலேயே தண்ணீர் கொண்டு வர எங்கள் தலைவர் கைவசம் திட்டம் உள்ளது என்பதைப் பெருமிதத்துடன் அறிவிக்கிறேன்!"

— ஜி. நீலா, மன்னார்குடி.



அமைச்சர்: கள்ளச் சாராயம் நம் ஆட்சியில் வெள்ளமாய்ப் பெருக்கெடுப்பதாகப் பிரசாரம் பண்றாங்களே, என்ன செய்யலாம்?

திடமதி: பேசாம, கள்ளச் சாராயம் குடித்து இறப்போர் குடும்பத்துக்குப் பத்தாயிரம் ரூபாய் நஷ்டஈடுன்னு அறிவிச்சுடுங்க. அப்புறம் ஒரு பய வாய் திறக்க மாட்டான்!

— நெல்லை அறிவரசு, சென்னை — 49.



திடமதி: தலைவரே! இந்த இட ஒதுக்கீடு பிரச்னை சம்பந்தமா ஒரு விஷயம்...

அமைச்சர்: என்ன, சொல்லு!

திடமதி: என்னைப் போன்ற பருமனான மனிதர்களுக்குக் கொஞ்சம் அதிகமா இட ஒதுக்கீடு செஞ்சு, பஸ், ரயில், விமானம் ஆகியவற்றில் வசதியாப் பயணம் செய்ய உதவினால் நல்லாயிருக்கும்!

— கே. டி. ஆர். சேகர், விருதுநகர்.

"நான் தேர்தல் வாக்குறுதி அளித்தபடியே கொசுக்களை ஒரே மாதத்தில் ஒழித்துக் கட்டிவிட்டேன். அதன் பிறகும் இங்கே கொசுக்கள் இருப்பதாகப் புகார் கள் எழுமானால், நான் சொல்லிக்கொள்ள விரும்புவதெல்லாம், இவை இந்தத் தொகுதிக் கொசுக்கள் அல்ல, பக்கத்துத் தொகுதியிலிருந்து பறந்து வந்திருப்பவை என்பதே!"

— தங்க குஞ்சிதபாதம், சிதம்பரம்.



• வி. டி. சுவாமி

• காசிநாத்

# சிறந்தாய் வாழி காவேரி!

உழைப்பால் உயர்ந்த ஒருவரின் வெற்றிக் கதைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு வி.டி. சுவாமியின் வாழ்க்கை வரலாறு. சிறுவனாக, டிக்கெட் எடுக்கக் கூடக் காசில்லாமல் சென்னை வந்து சேர்ந்த சுவாமி இங்குமங்கும் ஓடியாடிச் சம்பாதித்து வாலிப வயதில் கல்கத்தா போய்ச் சேர்ந்தார். கைவசம் இருந்த கொஞ்சம் பணத்தைப் பங்கு மார்க்கெட்டில் முதலீடு செய்தார். லாபத்துக்கு விற்றார். தொடர்ந்து பங்குகளை வாங்கி விற்பதிலேயே தம் கைவரிசையைக் காட்டி ஏராளமாகச் சம்பாதித்தார். லட்சக் கணக்கில் குவிந்த பணம் வந்த வேகத்திலேயே கை நழுவிப் போய் விடவும் செய்தது! சுவாமி மீண்டும் ஏழையானார்.

ஆனால் இதனால் மனம் தளரவில்லை சுவாமி. ஒரு படிப்பினையாக இதனை ஏற்றார். பங்கு மார்க்கெட்டை மட்டும் நம்பி வாழலாகாது என்றும் தொழில் அல்லது வியாபாரமே நிரந்தரச் செல்வம் ஈட்டித் தரும் என்றும் புரிந்து கொண்டார். பங்கு மார்க்கெட்டில் விளையாடிய போது அவருக்கு எஃகு வியாபாரம் எப்படி நடக்கிறது என்பதில் ஓர் ஆழ்ந்த உள்நோக்கு கிடைத்திருந்தது. எனவே கடன் வாங்கிய பணத்துடன் எஃகு இறக்குமதியில் இறங்கினார். வெகு சீக்கிரமே நாட்டின் மிகப் பெரிய எஃகு வியாபாரிகளில் ஒருவரானார். சுதந்திரம் வந்த பிறகு உள்நாட்டிலேயே எஃகு உற்பத்தி ஆரம்பமாக இறக்குமதிக்குத் தடை விதித்தது அரசு! ஆனால் சுவாமி மனம் கலங்கவில்லை. எந்த நாடுகளிலிருந்து எஃகு இறக்குமதி செய்தாரோ அங்கெல்லாம் இந்திய எஃகை ஏற்றுமதி செய்ய ஆரம்பித்தார்! புதிய மார்க்கெட்டுகளையும் பிடித்தார். ஐந்தே ஆண்டுகளில் சுவாமி இருபது கோடி பெறுமானமுள்ள எஃகை ஏற்றுமதி செய்து நாட்டுக்கு அத்தியாவசியத் தேவையான அந்நியச் செலாவணியை சம்பாதித்துத் தந்தார்.

ஆனால் சுதந்திர இந்தியாவில் தொழில் வளம் பெருக, குடியிருப்புக்கள் அதிகரிக்க எஃகின் தேவை உள்நாட்டிலேயே அதிகரித்துக் கொண்டு போயிற்று. எனவே, சுவாமி எஃகு ஏற்றுமதியை மட்டும் நம்பி இருக்க முடியாது என்று உணர்ந்தார். எஃகைக் கொண்டு உள்நாட்டில் தயாரிக்கப்பட வேண்டிய கர்டர்கள், விட்டங்கள், கூரைக்கான ஆதாரங்கள், தூண்கள் முதலியவற்றைச் செய்ய ஆரம்பித்தார். புதிய தொழிற்சாலைகள் பல சுதந்திர இந்தியாவில் உருவாக இவை தேவைப்பட்டன. திருச்சியில் காவேரி ஸ்ட்ரக்சரல்ஸ் ஆரம்பமான கதை



• பாலாஜி




• காவேரி தயாரிப்பு

# ஊனமுற்றோருக்குக் கூடுதல் நேரம்...


• சசிகலா

வட்ட

* உலக மகா சக்தியாம் அருள்மிகு அன்னை ஆதி பராசக்தியின் திருக்கோயிலை அட்டையில் போட்டு, அக் கோவிலின் ஆன்மீகத் தொண்டையும், கல்வி, மருத்துவ பண்பாட்டுத் தொண்டையும் அழகுற எடுத்துக் கூறிய தங்களுக்கு என் சார்பாகவும், எங்கள் ஊர் வார வழிபாட்டு மன்றத்தின் சார்பாகவும் நன்றி.

பல்லவகுப்பம். கோ. இராஜேந்திரன்.

* மேல்மருவத்தூரில் உள்ளவர்களைப் பேட்டி கண்டு, துல்லியமாகச் செய்திகளை வெளியிட்டு, உண்மையாகவே எங்களை நெகிழ வைத்து விட்டீர்கள்.

சீர்காழி. ஆர். சாந்தகுமாரி.

* தலையங்கம் மூலம் அனைத்திந்திய அ.தி.மு.க. கட்சியில் ஏற்பட்டுள்ள பிளவுச் சூழ்நிலையை நடுநிலை நின்று மிகத் தெளிவாக எடுத்துரைத்துச் சம்பந்தப்பட்ட இரு கோஷ்டிகளின் பூசலையும் தவிர்ப்பதற்குத் தகுந்த நேரத்தில் புத்திமதி கூறிய கல்கிக்குப் பாராட்டுக்கள்!

திருச்சி — 5. எம். காமராஜ்.

* அ.தி.மு.க. கட்சிப் பூசலைக் கண்டித்தும், ஜானகியை எதிர்நோக்கி இருக்கும் பிரச்னைகளையும், தமிழக மக்களின் பிரச்னைகளையும், முடிவாக பிரச்னை தீர நல்ல வழியையும் சொல்லியிருக்கும் தலையங்கம், ஓர் 'ஆல் இன் ஒன்' தலையங்கம்!

குத்தாலம் எஸ். ராஜா.

* 'உயிர் காக்கும் மருந்துகள் நஞ்சாகும் போது' கட்டுரை மிகவும் பயனுள்ளதாக அமைந்திருந்தது. அரசின் அலட்சியப் போக்கையும், அரசு மருத்துவ அலுவலரின் ஆர்வமின்மையையும் எடுத்துரைக்கும் வண்ணம் அமைந்திருந்தது.

திருமருகல் மு. செந்தில்வாசன்.

* மனிதனை நேசிப்பவனே வாழ்க்கையை நேசிக்கிறான். மனித நேயத்தை மேன்மைப்படுத்தி, தூய்மையான 'காதலுக்கு' வயது ஒரு தடையல்ல எனும் கருத்தை வெகுவாய் விளக்கிய 'பாரதியின்', 'கல்யாணம்' சிறுகதை, மனத்தை மகிழ்ச்சியிலாழ்த்தியது!

சென்னை — 15. இரா. சி. இரஞ்சன்.

* உலகம் வெளியே இருக்கிறது என்ற கதையின் மூலம் சித்ரா என்கிற யதார்த்தமானதொரு கேரக்டரைக் கண் முன்னே அற்புதமாகக் காட்டி விட்டார் நாகராஜன்.

கீழக்கரை. அ. பெ. ரவி.

* 'மேலதிகாரியைச் சமாளிப்பது எப்படி?' என்கிற கட்டுரை உண்மையிலேயே அற்புதமாக இருந்தது ஸார். மிகவும் பயனுள்ள ஒன்று அது. மிகவும் பாராட்டுக்கள்!

திருச்சி — 16. சரஸ்வதி பஞ்சு.

* 'மைக்கேல் ராஜ்' போன்ற அறுவைப் படங்களுக்கெல்லாம் ஏன் சார் இப்படி வரிவரியாக விமர்சனம் எழுதி எங்கள் வயிற்றெரிச்சலைக் கிளப்புகிறீர்கள்...!

புத்தளம்பட்டி. சி. மணி.

* 'கல்கி' (13.9.87) இதழின் முதல் பக்கத்தில் வெளியான 'காலினால் எழுதித் தலையெழுத்தை மாற்றும் சிறுமி' — கட்டுரையில், மாணவி சசிகலா, 'எஸ். எஸ். எல். சி. தேர்வில் எனக்கு மட்டும் கூடுதலாக அரை மணி நேரம் ஒதுக்கியிருந்தால், இன்னும் அதிக மதிப்பெண்களைப் பெற்றிருப்பேன்!' என்று குறிப்பிட்டிருந்தாள் அல்லவா! அதோடு, அக் கட்டுரையில், 'இது போன்ற ஊனமுற்ற மாணவர்களுக்குப் பரீட்சை எழுதும் போது அதிக நேரம் ஒதுக்க வேண்டும் என்ற அடிப்படை விஷயம் கூட நமது அரசுக்கும் அதன் ஓர் அங்கமான கல்வி இலாகாவுக்கும் புரியாமலிருக்கிறதே!' என்று நாமும் எழுதியிருந்தோம் அல்லவா! அதற்கு நல்ல பலன் கிடைத்துள்ளது. இந்த ஆண்டிலிருந்து, மாணவி சசிகலாவுக்கு, அரசுத் தேர்வில், ஒதுக்கப்பட்ட நேரத்திலிருந்து கூடுதலாக ஒரு

---

இதுதான். வெகு சீக்கிரமே இந்த நிறுவனம் அபார வளர்ச்சியுற்றது. சாமானிய எஃகு அமைப்புக்கள் மட்டுமின்றிச் சிக்கலான எஃகு பாய்லர்கள்; மிகுந்த அழுத்தம் தாங்கக் கூடிய பாண்டங்கள் முதலியவற்றைத் தயாரிக்க ஆரம்பித்தது. பெட்ரோலியம் சுத்திகரிப்பு ஆலைகள், மின் உற்பத்தி நிலையங்கள், அணுசக்தி நிறுவனங்கள், புல்டோசர்கள்—டிராக்டர்கள் தயாரிப்புத் தொழிலகங்கள், நிலக்கரிச் சுரங்கங்கள், ரசாயன உர உற்பத்தி ஆலைகள். பெட்ரோலிய எண்ணெய்க் கிணறுகள் முதலியவற்றுக்குத் தேவைப்படும் சிக்கலான, தரத்தில் சிறப்பான எஃகு பாகங்கள் காவேரி ஸ்ட்ரக்சுரல்ஸ் நிறுவனத்தால் தயாரிக்கப்பட்டன. வேலைத் திறனும் தரக் கட்டுப்பாடும் அயல்நாட்டு நிறுவனங்கள் பலவற்றின் ஆர்டர்களையும் பெற்றுத் தந்தன.

இதனால்தான் சுவாமி சொல்கிறார், "காவேரி ஸ்ட்ரக்சுரல்ஸ் எங்களைச் சம்பாதிக்கச் செய்தது மட்டுமல்ல; எங்கள் அறிவை விருத்தி செய்து கொள்ளவும் வைத்தது" என்று. நுணுக்கமான தயாரிப்புக்களுக்கு ஏற்ப அறிவாற்றலைப் பெறுவதும் அறிவாளிகளைப் பயன்படுத்திக் கொள்வதும் இன்றியமையாததாயிற்று. காவேரி ஸ்ட்ரக்சுரல்ஸ் என்ற பெயரும் காவேரி இன்ஜினீரிங் இண்டஸ்ட்ரீஸ் என்று பெயர் மாற்றம் பெறுவது தவிர்க்க முடியாததாயிற்று.

இன்று காவேரி இன்ஜினீரிங் சுற்றுப்புறச் சுகாதாரத்தைக் காப்பதிலும் ஈடுபாடு

மணி நேரம் எழுத கல்வி இலாகா அனுமதியளித்து, உத்தரவு பிறப்பித்துள்ளது. இந்த மகிழ்ச்சியான செய்தியை மாணவி சசிகலா நன்றிப் பெருக்கோடு நம்மிடம் குறிப்பிட்டாள். கல்வி இலாகாவுக்கும் நமது பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

குளச்சல், குளச்சல் இப்ராஹிம்.

* பாரதியார் பல்கலைக் கழகத் துணை வேந்தரைப் பேட்டி கண்டு எழுதியதாகத் தங்கள் கல்கி (3.1.88) இதழில் சில கருத்துக்கள் வெளியாகியுள்ளன. அவற்றுள் சில தவறுதலாகக் குறிப்பிடப்பட்டுள்ளன என்பதை, அப்பேட்டியின் போது உடனிருந்த பேராசிரியர்களாகிய நாங்கள் தங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறோம்.

ஆசிரியர்கள் யாரையும் துணை வேந்தர் ஒருமையில் குறிப்பிடவில்லை. ''Who told you?'' என்று அவர் கேட்டதை, ''எவன்'' என்றபொருள் தரும்படி வெளியாகியிருப்பது தவறு.

''சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து வந்துள்ள ஆசிரியர்களைப் பாரபட்சமாக நடத்துகிறீர்களாமே?'' என்று நிருபர் கேட்ட கேள்விக்குப் பதில் அளிக்கையில், ''நான் அனைத்து ஆசிரியர்களையும் எப்பொழுதும் சமமாகக் கருதுவதோடு அவர்கள் ஆராய்ச்சி மற்றும் தங்கள் பணி தொடர்பாகத் தேவையான உதவிகள் கேட்டு வரும் பொழுதெல்லாம், ''If they have any problem and need help, I will try to solve them'' என்று துணைவேந்தர் கூறியதைத் தவறாக எடுத்துக் கொண்டு, ''இவர்களை எப்படிச் சமாளிப்பது என்று எனக்குத் தெரியும்'' என்றும், ''என் துரதிர்ஷ்டம் சில பேராசிரியர்கள் சரியாக அமையவில்லை'' என்றும் துணைவேந்தர் கூறியதாகத் தாங்கள் வெளியிட்டிருப்பது உண்மைக்குப் புறம்பானது. அப்படி அவர் கூறவேயில்லை.

எங்கள் துணைவேந்தர் எப்போதும் ஆசிரியர்களை மதிப்பவர்; தவறியும் கூட அவர்களைப் பற்றித் தவறான சொற்களைப் பேசாதவர்; அவரைப் பற்றித் தவறான அபிப்பிராயம் ஏற்படும் வகையில் பேட்டிச் செய்தி வெளியாகியிருப்பது குறித்து வருந்துகிறோம்.

கோவை — 46. க. சாருகேசி,
கி. கருணாகரன்.

## நமது நிருபரின் பதில்......

துணைவேந்தரைப் பேட்டி கண்ட போது கடிதம் எழுதிய இந்த இரு பேராசிரியர்களும் உடன் இருந்தார்கள் என்பது உண்மைதான் என்றாலும், துணைவேந்தர் ஒன்றும் புரியாத் மொழியில் பேசவில்லை. எளிமையான ஆங்கிலத்தில் தான் பேசினார்.

ஒவ்வொரு கேள்வியைக் கேட்டு முடித்ததும், 'Who told you?' என்று ஆரம்பித்துச் சில கேள்விகளுக்கும் 'எவன் சொன்னான்?' என்று ஆரம்பித்துச் சில கேள்விகளுக்கும் பதிலளித்தது தான் உண்மை. மொத்தத்தில் அவர் குரலில் இருந்த வேகத்தை — ஆத்திரத்தைப் பார்த்த போது, நிச்சயமாக மரியாதை தொனிக்கும் விதத்தில் அவர் சொன்னதாகத் தெரியவில்லை.

சென்னைப் பல்கலைகழகத்திலிருந்து வந்துள்ள ஆசிரியர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது 'I know how to tackle them' என்று கூறியதோடு மட்டுமின்றி கடுமையான வார்த்தைகளால் அவர்களை ஏசினார். பத்திரிகை நாகரிகத்தைக் கருதி அவற்றை எழுதவில்லை.

துணைவேந்தர் ஆசிரியர்களை மதிப்பவர், தவறான வார்த்தைகள்பேசாதவர்... என்பதெல்லாம், கடிதம் எழுதிய இந்த இரு பேராசிரியர்களைப் பொறுத்த மட்டில் உண்மையாக இருக்கலாம். ஆனால் அத்தகைய எண்ணம் எனக்கு ஏற்படவில்லை.

— நமது நிருபர்

---

கொண்டு, ஓசைக் கட்டுப்பாடு, கழிவு நீர் சுத்திகரிப்பு முதலியவற்றில் கருத்துச் செலுத்துகிறது. ஆராய்ச்சிகள் பல செய்து, ஆலைகளும் அமைத்து வெற்றி கண்டிருக்கிறது. டைரக்டர்களில் ஒருவரான பாலாஜி சொல்கிறார், ''நாங்கள் புதிய துறைகளில் புக வேண்டும் என்ற ஆர்வம் கொண்டிருப்பது மட்டுமல்ல, இந்த ஆர்வம் நாட்டின் முன்னேற்றத்துக்கு அத்தியாவசியமானது என்பதைய... உணர்ந்திருக்கிறோம்'' என்று. இவ்வாறு இவர்கள் அடியெடுத்து வைத்துள்ள துறைகள் பல இந்தியாவுக்கே ஏன், ஆசியாவுக்கே கூட புதியதான துறைகள். முன்னோடிகள் இங்கு இல்லாததால் இவர்களே முன்னோடியாக விளங்க நேர்ந்திருக்கிறது. இதனால் எத்தனை பிரச்னைகள் உருவாகக் கூடும் என்பதை எளிதில் ஊகிக்கலாம். ''சிரமங்களையும் பிரச்னைகளையும் சமாளிப்பதை ஒரு சவாலாகக் கருதி ஏற்கிறோம்'' என்கிறார் நிர்வாக இயக்குனர் காளிதாஸ்.

ஏராளமான இன்ஜினியர்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டிருப்பது மட்டுமல்ல; அவர்களுடைய அறிவாற்றலை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் அவர்களுக்குப் புதிய புதிய சவால்களை உருவாக்கித் தந்து கொண்டிருக்கிறது இ... வெள்ளி விழா காணும் காவேரி இன்ஜினியரிங் நிறுவனம். வெள்ளி ஆண்டுகள் இனி பொன்னான ஆண்டுகளாக மாற நாமும் வாழ்த்துவோம்!

— எஸ். வி.

"ஜயசீலனா?"

ஜயசீலன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

பால்ய சினேகிதன் பொன்னம்பலம் அவனைக் கூர்மையாகப் பார்த்தபடி நின்றிருந்தான்.

ஜயசீலன் மறுமொழி ஏதும் சொல்லாமல் லேசான புன்னகையுடன் அவனுடைய கையை அழுத்திப் பிடித்து ஜனக் கும்பலை மெல்ல விலக்கிக் கொண்டு,

"வா, வெளியே போகலாம்" என்றான்.

"உன்னைப் பார்த்துக் கன காலம் ஆச்சு?" என்றான் பொன்னம்பலம்.

"ஓம். நான் இங்கே இருக்க இல்லே. இந்தியாவுக்கு வழுக்கிட்டுப் போயிருந்தேன்."

அவர்கள் விரைவாக நடந்து சாலையைக் கடக்கும் வரை பொன்னம்பலம் பேசவில்லை.

மற்றவர் தன்னைச் சட்டென்று அடையாளம் கண்டு கொள்ளக் கூடாது என்று தலையைச் சுற்றி ஜயசீலன் ஒரு துண்டைக் கட்டியிருந்தான். முகத்தில் தாடி வளர்ந்திருந்தது. பொன்னம்பலம் எத்தனை சுலபமாக அடையாளம் கண்டு கொண்டான் என்று மெலிதான கவலை எழுந்தது.

நல்லூரடிப் பகுதியையும் ஜனத்திரளையும் தாண்டித் தொலை தூரம் வந்தும் ஒலிபெருக்கியின் சத்தம் கேட்டது. உண்ணா நோன்பு நோற்று வீரமரணம் அடைந்தவருக்கான அஞ்சலிகள் உணர்ச்சி வேகத்துடன் கேட்டன. பரிதித் துறை சாலையில் சற்றுத் தூரம் நடந்து, சந்தடியில்லாத ஓர் இடத்தில் இருவரும் அமர்ந்தார்கள். பொன்னம்பலத்தின் முகத்தில் தயக்கமும் யோசனையும் தெரிந்தது. பொன்னம்பலம் சாதுவான பையன். எந்த இயக்கத்திலும் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளாதவன்.

"நீ இறந்து போயிட்டதாகக் கேள்விப் பட்டேன் ஜயசீலன்! உன்னை இன்டைக்குக் கண்டதும் பயந்து கூடப் போய் விட்டேன்!"

ஜயசீலன் மெலிதாகப் புன்னகை செய்தான். "நான் ஒரு கல்லுளி மங்கன் பொன்னம்பலம்! சாவுடைய வாயிலே புகுந்து புகுந்து வெளியே வந்து கொண்டிருக்கேன். உன்னைப் பார்த்து கன காலம் ஆச்சு. நீ என்னை அடையாளம் கண்டது ஆச்சரியம் தான்."

"உன் கண்ணை நீ மறைக்க இயலாது ஜயசீலன்! கனவிலே மிதக்கிற கண்கள் — பயங்கரவாதத்துக்குச் சம்பந்தமில்லாத..."

ஜயசீலன் தலையைக் குனிந்து கொண்டான்.

"நான் பயங்கரவாதி இல்லே பொன்னம்பலம்!"

பொன்னம்பலம் சற்று நேரம் எதுவும் பேசவில்லை. பிறகு மெள்ளச் சொன்னான்.

"நீ அந்தக் கும்பலிலே எப்படிச் சேர்ந்தாய் என்று எனக்கு விளங்கவே இல்லே. சரித்திரக் காரணங்களால பொடியன்கள் அதில் தள்ளப்பட்டார்கள் என்டுதான் கொள்ளணும். வேறு விளக்கம் இல்லே."

"ஓம். வேறு விளக்கம் இல்லே" என்றான் ஜயசீலன் தொலைவைப் பார்த்து. "எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் உமக்கும் ஏற்பட்டிருந்தால், உம்ம சரித்திரமும் வேறாய் இருந்திருக்கும் பொன்னம்பலம்! பழிக்குப் பழி

# நிற்க நிழல் வேண்டும் 27

என்கிற உத்வேகம் மனசிலே தீயாய் மூளும் போது போராட்டத்திலே சேர்ந்து கொள்கிறதைத் தவிர வேறு வழி இருக்கல்லே."

பொன்னம்பலம் லேசாகப் பெருமூச்சு விட்டான்.

"எனக்கு இப்பவும் வழி ஒன்டும் தெரியல்லே ஜயசீலன்." பிறகு சரேலென்று அவனை நிமிர்ந்து பார்த்தான்.

"நீ இன்னும் அந்த இயக்கத்திலே இருக்கியா?"

"ஓர் இயக்கத்திலேயும் இல்லே. நோக்கமே திசை மாறிப் போச்சு என்ட ஏமாற்றத்திலே — அதனாலேயே தலைமறைவா இருந்தேன்."

"இப்பவும் உமக்கு ஆபத்து இருக்கும் ஜயசீலன்!"

"இருக்கும்தான். அதற்கு எத்தனை காலம் தலைமறைவாயிருக்க முடியும், சொந்த மண்ணை விட்டு?"

"அதுவும் சரிதான்" என்றான் பொன்னம்பலம். "என்னைப் பாரேன். எந்த மாதிரி நிலைமையிலும் யாழ்ப்பாணத்தை விட்டு வெளியேறக் கூடாது என்கிற உறுதியோடு தான் இருந்து வர்றேன்; சிங்கள குண்டுக்கும்

வாஸந்தி

போராளி குண்டுக்கும் ஈடுகொடுத்துக் கொண்டு! இந்த மண்ணிலே எப்படியாவது சமாதானம் வரணும் என்டு நல்லூர் கந்த சாமிக் கடவுளைத் தினமும் வேண்டிக் கொண்டு! கடவுள் கண் திறந்தது போல இந்திய அமைதிப் படை வந்தது. இனிமேல் சமாதானம் வந்துவிடும் என்டு நம்பினேன். செத்துச் செத்து பயந்த காலம் எல்லாம் போச்சு என்டு நினைச்சேன். இப்பப் பார், மறுபடியும் பொடியன்கள் குழப்பமுன்கள். எனக்கு ஒன்டும் விளங்க இல்லை.''

''நல்லூரடியிலே இன்டைக்கு இருக்கிற கூட்டத்தைப் பார்த்தால் அவன்களுக்கு நல்ல ஆதரவு இருக்கும் போல இருக்கு!''

''உணர்ச்சி வசப்பட்ட நிலையிலே முட்டாள் ஜனங்கள் வேற எப்படி நடந்து கொள்வார்கள்? உணர்ச்சி வடிஞ்சதும் நிலைமை விளங்கும். நான் ஓர் உண்மையைச் சொல்றேன் — மக்களுக்குச் சமாதானத்தைத் தவிர வேறு எதுவும் இப்பத் தேவையில்லை. ஜனநாயக அமைப்பு வந்தால் தங்கள் பலமும் ஆதிக்கமும் குறைஞ்சுடுமோ என்கிற பயத்



தாலே இந்தப் போராளிகள் குழப்பத்தை ஏற்படுத்தினலும், கடைசியிலே மக்கள் தீர்ப்பு சமாதானத்துக்காகத்தான் இருக்கும். இந்த பயங்கரவாதக் குழப்பத்துக்கெல்லாம் நிரந்தரத்தன்மை இருக்குமா? நம்ம பிரச்னையை ஆயுதத்தினலே தீர்த்துக்க இயலாது ஜயசீலன். சரியான அரசியல் தீர்வுதான் தீர்க்க முடியும். ஆனல் ஒரு விஷயம் ஒத்துக்கொள்ள வேணும். இந்த ஆயுதப் போராட்டத்தினலேதான் ஓர் அரசியல் தீர்வுக்கான நிர்ப்பந்தத்துக்கு இலங்கை அரசைக் கொண்டு வர முடிந்தது. இப்ப ஒரு சாதகமான சந்தர்ப்பம் உருவாகியிருக்கு. அதை உபயோகிக்க நாம தவறிவிட்டோம் என்டா, நமக்குப் பிறகு விமோசனமில்லே. ஆயுதப் போராட்டம் ஒரு கால கட்டத்துக்கு வேண்டியிருந்தது. அந்த கட்டத்தோடு நிறுத்திக்க வேண்டியதுதான் புத்திசாலித்தனம்.''

ஜயசீலன் வியப்புடன் பொன்னம்பலத்தைப் பார்த்தான். அரசியலில் இவனுக்கு முன்பு நாட்டமே இல்லே. இந்த கால கட்டத்தில் யாரும் அரசியலிலிருந்து விலகி இருக்க முடியாது என்று தோன்றிற்று.

''இனிமேல் ஆயுதப் போராட்டத்தை மக்களே விரும்ப மாட்டார்கள் என்டு கதைக்கிறே?''

''ஓம். எளிய மக்கள் என்ன? நான் கேள்விப்பட்டேன். போராளிக் கும்பலிலேயே பொடியன்கள் இனி ஆயுதச் சரண் செய்வோம் என்டு கதைச்சான்களாம். பள்ளிப் படிப்பைத் தொடரணும், வீட்டிற்கு மீளப் போகணும் என்டு —''

''பிறகு?''

''பிறகென்ன? போராளிக் கும்பல்லே சேர்ந்த பிறகு, நினைச்சபடி நடக்க முடிகிறதா? நீ விலகிட்டதாக் கதைக்கிறே. ஆனல் தலைமறைவாத்தானே இருக்க வேண்டியிருக்கு?''

ஜயசீலன் மௌனமாகத் தலையைக் குனிந்தபடி இருந்தான்.

''நான் சில சமயம் நினைக்கிறேன் ஜயசீலன் — அரசியல்லே வர்ற எதேச்சாதிகாரப் போக்குக்கெல்லாம் ஒரு சில அகங்காரம் பிடிச்சவன்கள் மட்டுமே காரணம். அவங்கள் ஆடுகிற சொக்கட்டான் ஆட்டத்திலே உருண்டு விழறது ஒரு பாவமும் அறியாத மக்கள்!''

''இது சரியான வார்த்தை'' என்றபடி ஜயசீலன் எழுந்தான். ''அப்பாவித்தனத்துடனேயே இருப்பதும் ஆபத்து பொன்னம்பலம். அவர்களிடையே ஒரு சரியான அரசியல் பிரக்ஞையை உருவாக்கணும்.''

''அந்த வேலையெல்லாம் நீ செய். எனக்கு இயலாது.''

''நீ எதுவும் செய்ய வேண்டாம். என்னேடு இப்பக் கதைச்சியே அப்படி நாலு பேரிடம் தினமும் கதைச்சாப் போதும்.''

பொன்னம்பலமும் எழுந்தான்.

''அந்த முருகக் கடவுள்தான் காப்பாற்றணும்'' என்றுன் உண்மையான விசனத்தோடு. பிறகு தயக்கத்துடன் கேட்டான்:

''உன் சிநேகிதி என்ன ஆனள் சீலன்? என்னவோ கேள்விப்பட்டேனே?''

''உயிரோடு இருப்பதாகத் தகவல் கிடைச்சது பொன்னம்பலம். அவளைத் தேடிக் கொண்டுதான் வந்திருக்கேன்.''

பொன்னம்பலம் ஒரு விளுடி அவனை அனுதாபத்துடன் பார்த்தான்.

''அது உண்மை என்டா, நல்ல செய்தி சீலன். அதுவரை உம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியது அவசியம்.''

அவனிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு மீண்டும் பதுங்கிப் பதுங்கி நடந்தபோது பொன்னம்பலத்தின் எச்சரிக்கை உண்மையானது என்று நினைத்துக் கொண்டான். ஆபத்து எப்பொழுது வேண்டுமானுலும் வரலாம்.

சீலியாவின் தூரத்து உறவினர் ஸ்டான்லியின் வீட்டில்தான் அவன் இப்பொழுது இருந்தான். சீலியா அவர்களிடத்துக்குத்தான் கடைசியில் வருவாள் என்கிற நிச்சயத்தில். அவனல் அவர்களுக்கு ஆபத்து வந்தாலும் வரலாம். இங்கு யாருக்கும் சீலியாவைப் பற்றித் தெரியவில்லே. அவள் உயிரோடு இருக்கிறுள் என்று கூட யாருக்கும் தெரியவில்லே. எந்தப் பைத்தியக்கார நம்பிக்கையில் நாம் இருக்கிறேம் என்று புரியாமல், அவன் ஒவ்வொரு விநாடியையும் எதிர்பார்ப்பில் கழித்தான்.

தெருவெல்லாம் வெறிச்சோடிக் கிடந்தன. ஊரே நல்லூரடியில் திரண்டிருந்தது. இந்த உணர்ச்சிக் கொந்தளிப்பெல்லாம் விரைவில் வடிந்து போகும் என்று பொன்னம்பலம் நினைப்பது உண்மையானல் நல்லது. ஆனல் போராளிகள் கலபத்தில் பணிவார்கள் என்று தோன்றவில்லே. பெருங் குழப்பத்தை ஏற்படுத்தலாம். சந்தர்ப்பத்தை வேண்டுமென்றே தலைமைப் பீடத்தில் இருப்பவர்கள் நழுவ விடலாம். ஆனல் பொன்னம்பலம் உறுதியோடு சொல்கிறுன், மக்கள் தீர்ப்பு சமாதானத்துக்கு என்று. ஓர் அரசியல் தீர்வுக்கு வழியேற்படாவிட்டால் அவர்களுக்கு வெற்றி எப்படிக் கிட்டும்?

அவன் வேகமாக நடந்து ஸ்டான்லியின் வீட்டுக் கொல்லேக்குச் சென்றுன். தனக்காக,



''மேடையில் தலைவர் என்ன பேசுருர்? புரியலேயே!''

''மக்களுக்குத் தெளிவான சிந்தனே வேணும்னு சொல்லுருர்!''

— என். வி. ரமணி.

''அந்த ஆபீஸ் வாசலில் என்ன வித்துக்கிட்டு இருக்காங்க?''

''லஞ்சத்தை வைச்சுக் கொடுக்கறதுக்கு, தொகைக்குத் தகுந்த மாதிரி வெவ்வேறு கலரில் கவர்கள் வித்துக்கிட்டு இருக்காங்க!''

— ஆர். லதா.



அவர்கள் ஒதுக்கியிருந்த அறையின் வழியாக அவன் உள்ளே சென்றான்.

ஸ்டான்லியும் அவருடைய மனைவியும் காணோம். நல்லூர் வீதிக்குச் சென்றிருக்க வேண்டும். அவன் கண்ணை மூடிப் படுத்தான், எத்தனை காலத்துக்கு இப்படி பேடியைப் போல், ஆக்கபூர்வமான வேலை எதுவும் செய்யாமல், தலைமறைவாக வாழ்வது என்கிற கவலையுடன்.

கதவு லேசாக, ஆனால் பதற்றத்துடன் தட்டப்படும் ஓசை கேட்டது. புலன்கள் எல்லாம் முறுக்கப்பட்டாற்போல் அவன் எச்சரிக்கையானான்.

மீண்டும் கதவு தட்டப்பட்டு, மிருதுவாகக் குரல் ஒலித்தது.

''தெரஸா அத்தை, சீலியா வந்திருக்கேன்!''

ஒரு விநாடி அவனால் நம்ப முடியவில்லை. மறுவிநாடி மூளை இயங்குமுன் உடம்பே முன்னால் பாய்ந்தது. கதவைத் திறந்தது. சீலியாவின் முழு உருவம் உள்ளே வந்து நின்றதும் உறைந்து நின்றது. சீலியா கதவைத் தாழ்ப்பாள் போட்டு, அவனைப் பார்த்து மெதுவாகப் புன்னகை செய்து ''சிலன்!'' என்றாள்.

இரத்த அணுக்களில் பாய்ந்த மின்சார ஜ்வாலையை அடக்க முடியவில்லை. ஜுர வேகத்துடன் அவளை அவன் அணைத்துக் கொண்டான். இந்தத் தருணத்துக்காகவே இழுத்துப் பிடித்து நிறுத்தியிருந்த உயிருக்கு ஜன்ம சாபல்யம் ஏற்பட்டது போல் மனம் உருகிப் போயிற்று. வெகு நேரமாயிற்று அவர்களுக்குத் தங்களை நிதானப்படுத்திக் கொள்ள.

இடைக்காலப் பிரிவில் நடந்த விஷயங்களையெல்லாம் அவர்கள் மாய்ந்து மாய்ந்து பேசித் தீர்த்தார்கள்.

''இப்பொழுது நம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியது ரொம்ப அவசியம் சீலியா.'' என்றான் ஜயசிலன். ''புனருத்தாரண வேலையிருக்கு. குழம்பிக் கிடக்கும் பொடியன்களைத் தெளிவுபடுத்தணும். வெளிப்படையாய்ச் செய்வது கஷ்டம். இரகசியமாத் துண்டுப் பிரசுரம் விநியோகிக்கணும்.''

''அது அவ்வளவு சுலபமில்லே ஜயசிலன். சுகுமாரன் இங்குதான் இருக்கான். இன்டைக்கு அவனைக் கண்டுதான் பிரபுவிடம் கூடக் கதைக்காமல் ஓடி வந்தேன். பிரபு என்னைப் பற்றித் தப்பா நினைச்சிருப்பார்.''

''பிரபு புரிந்து கொள்வான். நம்முடைய கரைச்சல்கள் என்ன என்டு தெரிந்தவன். நான் இப்ப என் இயக்கக்காரர்களை நேரடியாய் சந்திச்சு என் எண்ணத்தையும் நோக்கத்தையும் விளக்கறதைத் தவிர வேற வழியில்லே சீலியா.''

''வேண்டாம் சிலன்!'' என்றாள் அவள் பீதியுடன். ''நீ என்ன விளக்கினாலும் அவர்கள் அதை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். உன்னைத் தீர்த்துக்கட்டப் பார்ப்பார்கள் துரோகி என்டு.''

''அதற்காக நான் எத்தனை காலம் தலைமறைவா வேலை செய்ய முடியும் சீலியா?''

''கொஞ்ச காலத்துக்குத் தலைமறைவாய்த்தான் இருக்கணும் சிலன். அவர்கள் எதையும் விளங்கிக் கொள்கிற நிலைமையிலே இல்லே. சில சமயம் எனக்கு அவன்களை நினைத்துப் பாவமாயிருக்கு சிலன் — எப்படிப்பட்ட மூலைக்கு விரட்டப்பட்டிருக்கிறான்கள், சூழ்நிலையினாலே! இப்படி அவன்கள் உருவெடுத்திருக்கிறதும் ஒரு சரித்திர நிர்ப்பந்தம் சிலன்!''

ஜயசிலன் தீவிரத்துடன் சொன்னான்.

''அது ஒரு பயங்கர மயக்கம், சீலியா! அது நிரந்தரமானதாயிருக்க முடியாது. அதிலிருந்து வெளியே வர அவன்களுக்குத் தைரியம் வரணும். துவக்கை பிடிக்கிறது வீரமில்லே, அதைக் கீழே வைக்க வேண்டிய தருணம் வந்ததும் கீழே வைக்கிறதுதான் வீரம் என்று புரிந்து கொள்ளணும். என்ன ஆபத்து வந்தாலும் இதுக்காக நாம் பாடுபடணும் சீலியா!''

சீலியா மெல்லிய புன்னகையுடன் சொன்னாள்.

''உன்னைக் கண்டு பிடிக்க முடியாமல் போனாலும் அந்த வேலையைச் செய்யணும் என்டுதான் நான் இங்கே வந்தேன் சிலன்!''

''இயக்கத்துக்காரர்கள் பார்வையிலிருந்து அதிக நாள் நான் தப்பிக்க முடியாது. நேரிடையா ஒரு முறை சந்தித்து விட்டால் பயம் விட்டுப் போனாலும் போகும். என்னுடைய எண்ணத்தைத் தெரிவிச்சே ஆகணும் சீலியா.''

சீலியா பதில் சொல்லவில்லை. அவன் அவள் கையைப் பற்றினான்.

''நாம பிழைச்சிருக்கிறது மட்டும் முக்கியமில்லே சீலியா.''

'விளங்குகிறது' என்பது போல் அவள் தலையசைத்தாள்.

(அடுத்த இதழில் முடியும்)

இந்திய நதிகள்



# ஸ்ரீ பகவான் பலராமர் பன்னிரண்டு மாதம் பாரத வர்ஷத்தைப் பிரதக்ஷிணம் செய்து தீர்த்த ஸ்நானம் செய்த விதம்!

பிரபாஸ தீர்த்தத்தில் ஸ்நாநமும், தர்பணமும் செய்து யமுனை, சரஸ்வதி, கங்கை முதலிய திரங்களிலுள்ள க்ஷேத்திரங்களை தரிசித்துக் கொண்டு நைமிசாரணியம் வந்தார். பிறகு கௌசகி நதியை அடைந்து அவ்விடத்தில் ஸ்நாநம் செய்த பிறகு ஸரயூநதி எங்கு இருந்து பெருகுகிறதோ அந்த நீர் நிலையை அடைந்தார். பிறகு பிரயாகை சென்று அங்கு ஸ்நானம் செய்து தேவர்கள் முதலியவர்களுக்கு தர்ப்பணம் செய்து புலஹாசிரமத்தை அடைந்தார்.

பிறகு கோமதி நதியிலும், கண்டகியிலும், விபாசா நதியிலும் ஸ்நானம் செய்து சோணா நதியிலும் ஸ்நானம் செய்து கயா க்ஷேத்திரத்தையடைந்து பிதிருக்களைப் பூஜித்து கங்கை ஸமுத்திரத்தைச் சேருமிடத்தில் ஸ்நானம் செய்து மஹேந்திரமலையில் பரசுராமரைத் தரிசித்து நமஸ்கரித்து கோதாவரி ஏழாகப் பிரிந்து ஸமுத்திரத்தில் சேருமிடத்தையும் கிருஷ்ணவேணி நதியையும் பம்பாஸரஸ்ஸையும் பீமரதீ நதியையும் அடைந்தார்.

பின்பு ஸ்கந்தரைத் தரிசித்து பலராமர் ஸ்ரீசைலம் என்ற சிவக்ஷேத்திரத்தை யடைந்தார். அந்த பிரபு திராவிட தேசத்தில் மஹா புண்ணிய க்ஷேத்திரமான வேங்கடமலையைத் தரிசித்துக் கொண்டு காமகோடி என்ற பிரசித்தமான காஞ்சி புரீயையும் காவேரி நதியையும் எந்த இடத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு ஸாந்நித்திய மடைந்திருக்கிறாரோ அந்த மகா புண்ணியமான ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தையும் தரிசித்தார்.

விஷ்ணு க்ஷேத்திரமாகிய ரிஷபாசலத்தையும் அவ்வாறே தென்மதுரை யையும் தரிசித்துக் கொண்டு ஸமுத்திரத்தில் கட்டப்பட்ட ஸேதுவை அடைந்தார்.

அவ்விடத்தில் பலராமர் பிராம்மணர்களுக்கு பதினாயிரம் பசுக்களை தானம் செய்தார். கிருத மாலா நதியையும் தாமிரபரணி நதியையும் அடைந்து அங்கு வீற்றிருந்த அகஸ்தியருக்கு அபிவாதனத்துடன் நமஸ்கரித்து அவருடைய அனுமதியுடன் தெற்கு சமுத்திரத்தை அடைந்து அங்கே கன்யா குமரி எனப் பெயர் பெற்ற துர்க்காதேவியைத் தரிசித்தார். அங்கு இருந்து மகாவிஷ்ணு எங்குப் பள்ளிக் கொண்டாரோ அந்தப் பால் குனம் என்ற அனந்த சயனத்தை அடைந்து உத்தமமான பஞ்சாப்ஸரஸ் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பதினாயிரம் பசுக்களை தானம் செய்தார்.

அங்கிருந்து கேரள தேசத்தையும் த்ரிகர்த்த தேசத்தையும் எங்கே பரம சிவனுடைய ஸாந்நித்திய மிருக்கிறதோ அந்த கோகர்ணம் என்று பெயர்ப் பெற்ற சிவக்ஷேத்திரத்தையும் அடைந்து பிறகு தீவின் நடுவில் உறைகின்ற அம்பிகையை தரிசனம் செய்து கொண்டு சூர்ப்பாரகத்தையடைந்தார். தாபீ நதியிலும் பயோஷ்னி நதியிலும் நிர்விந்தியா நதியிலும் ஸ்நானம் செய்த பிறகு தண்டகாரணியம் சென்று எந்த இடத்தில் மாஹிஷ்மதி நகரமிருக்கிறதோ அங்கு ரேவா நதியை யடைந்தார். மனு தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து மீண்டும் பிரபாஸ தீர்த்தத்தை யடைந்தார்.

ஸ்ரீமத் பாகவதம்









Adventures



* அநாகரிக அரசியல்

## நீங்கள் கேட்டவை — தராசு

* கே. வேங்கடசுப்ரமணியன், குடியாத்தம்.

? தேசிய கீதத்தில் வரும் சிந்து பற்றிய தங்களின் பதிலுக்கு முரசொலியில் வந்த விளக்கம் தராசுக்குத் திருப்தி அளிக்கிறதா?

! பூரண திருப்தி!

# ஜெயம் பெரிதா? வீரம் பெரிதா?

* வலங்கை ஜி. ராஜசேகர், வளையமாபுரம்.

? எதிர்க் கட்சிகளின் ஒற்றுமைக்குத் தடையாக இருப்பது எது?

! கட்சியின் தனித் தன்மை, அதனால் கிடைக்கும் தலைமை, பிராபல்யம், புகழ், செல்வாக்கு இவற்றை இழக்க விரும்பாத பேராசை!

* சீர்காழி ஆர். இராஜதுரை பிரியன், சீர்காழி.

? ஜெயம் பெரிதா? வீரம் பெரிதா?

! நீங்கள் எங்கே வருகிறீர்கள் என்று தெரிகிறது! முன்யோசனையில்லாத வீரமும் நேர்மையற்ற முறையில் கிடைக்கும் ஜெயமும் எப்போதுமே ஆபத்தானவைதாம்.

* பி. ரவிச்சந்திரன், சென்னை — 33.*

? டீ.வி. யில் மறைந்த முதல்வருக்கு அஞ்சலி செலுத்திய கலைஞர்களில் அநேகமாக ஒவ்வொருவரும் தன்னளவில் முதல்வர் என்ன செய்தார் என்பதைப் பற்றியே பேசியதைப் பற்றி என்ன கருதுகிறீர்கள்?

! தனிமனிதர்கள் முதல்வரைச் சந்தித்த போது பேசப்பட்டவையும் நடந்த சம்பவங்களும் முதல்வருக்கும் அவர் வகித்த பதவிக்கும் பெருமை சேர்ப்பதாக இருக்க வேண்டும். ஆனால் 'என் மகளுக்கு மெடிகல் ஸீட் வாங்கித் தந்தார்' என்பது போன்ற ஒப்புதல் வாக்கு மூலங்கள் அதைச் சொன்னவருக்கும் சரி, முதல்வருக்கும் சரி இழுக்கையே உண்டாக்கின. இது போன்ற செய்திகள் எம்.ஜி.ஆர். வாழ்ந்த காலத்திலேயே வெளியாகியிருந்தால் அவர் கண்டனத்துக்குள்ளாகியிருப்பார். இப்போது அவர் மறைந்து விட்ட நிலையில் நாமும் மறந்து விடுவதே மாபு!

* எஸ். ராம் கோபால், சென்னை — 33.

? எம். ஜி. ஆர். காலமானபோது நடந்த சட்டவிரோதச் செயல்களுக்குச் சமூக விரோதிகள் தான் காரணம் என்று முன்பு கூறிய தராசு, பிறகு ஒரு பதிலில் ஆளும் கட்சியினரும் அதில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று கூறியிருக்கிறாரே, ஏன் இந்த முரண்பாடு?

! பதில்களை எப்போதும் கேள்விகளுடன் இணைத்தே பார்க்க வேண்டும். முதல் கேள்வியில் வாகனங்கள் உடைப்பு, கடை உடைப்பு, தெரு விளக்குகள் உடைப்பு, சிலை உடைப்பு முதலியவைகளுடன் ஆளும் கட்சியை உடைப்பது பற்றியும் ஒப்புநோக்கிக் கேள்வி கேட்கப் பட்டிருந்தது. இரண்டாவது கேள்வியில் கருணாநிதி சிலை உடைக்கப்பட்டது பற்றி மட்டுமே கேட்கப்பட்டிருந்தது. பொதுச் சொத்துக்களுக்குச் சேதம் விளைவிப்பவர்கள் சமூக விரோதிகள் என்று பொதுவாகக் கருதப்படுகிறார்கள் ஆனால் எம்.ஜி.ஆர் மறைந்த போது பல நல்லவர்கள் கூட தாறுமாறாக நடந்து கொண்டது உண்மை. அவர்கள் இவ்வாறு கட்டுப்பாடு இழந்ததற்கு ஆறாத துயரம் சிந்தனையை மழுங்கச் செய்ததே காரணம் என்ற மனோதத்துவ உண்மையைக் கூறியிருந்தேன்.

* எஸ். வெங்கடேசன், கும்பகோணம்—1.

? ஜோசியத்தில் நம்பிக்கை உண்டா?

! ஆச்சரியப்பட வேண்டாம்; சுத்தமாகவே இல்லை.

* பி. குருமூர்த்தி சாஸ்திரிகள், மயிலாடுதுறை.

? அமரர் எம். ஜி. ஆர். அவர்களின் உயில் குறித்து?

! அந்த உயிலிலும் அவரது மனிதாபிமானம் வெளிப்படுகிறது. தவிர தமக்குப் பின்னால் கட்சி சிதறிப் போகும் என்கிற அவருடைய தீர்க்கதரிசனமும் சேர்த்தே எழுதப்பட்டுள்ளது. இருப்பினும் இன்றைய கோஷ்டிகளுக்கு அடிக்கல் நாட்டிய பெருமையும் எம். ஜி. ஆரையே சாரும் என்பதுதான் வேடிக்கை!

*** ஆர். ஜெ. பாலன், சிவகங்கை.**

**? அமிதாப்பைப் புகைப்படம் எடுத்த ஜீவன் ஜோஸின் துணிச்சலைப் பாராட்டியுள்ளீர்! அமிதாப் எவ்வளவுதான் தவறு செய்தவரானாலும் அவருடைய அனுமதியின்றிப் புகைப்படம் எடுப்பது தனி மனித உரிமையை மீறுவதாகாதா?**

! தனி மனித உரிமைகள் எவை என்பதில் உங்களுக்கு ஏகக் குழப்பம் என்று நினைக்கிறேன். அரசாங்கச் செலவில் லட்சத் தீவுகளில் விடுமுறையைக் கழிப்பதற்கும், அரசாங்க ஹெலிகாப்டரில் வந்து இறங்குவதற்கும் அமிதாப்புக்கென்று தனி உரிமைகள் ஏதும் கொடுக்கப்படவில்லை. அவருக்கான செலவு நாம் வியர்வையைச் சிந்தி உழைத்துச் செலுத்திய — செலுத்தப் போகிற வரிப் பணம். ஆக, நாம் கொடுத்த பணம் எப்படியெல்லாம் செலவழிக்கப்படுகிறது என்பதைக் கண்காணிக்கவும், அது விரயமாக்கப்படுவதை நிரூபிக்க ஆதாரங்களைத் திரட்டவும் பத்திரிகையாளர்களுக்கு மட்டுமல்ல; ஒவ்வொரு குடிமகனுக்கும் உரிமையுண்டு, நண்பரே!



* தனி மனித உரிமை...



* உயில் பற்றி....



* முரசொலி விளக்கம்

*** ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.**

**? தமிழகத்து அரசியலில் யாருடைய நிலை தங்களைப் பரிதாபப்பட வைக்கிறது?**

! மக்களின் நிலைதான்.

*** ஆர். மின்னல் ராஜன், திருச்சி — 8.**

**? எவ்வளவுதான் உழைத்தாலும் ஒரு மனிதனால் நூறு கோடிக்குச் சொத்து சேர்க்க முடியுமா?**

! இன்றைக்கிருக்கிற சட்ட திட்டங்களை நூற்றுக்கு நூறு மதித்து நடக்கும் எந்தவொருவராலும் முடியாது.

*** எம். ஆர். ராஜண்ணா, மாமல்லபுரம்.**

**? ஊழலே இல்லாத அரசாங்கம் எந்த நாட்டில் உள்ளது, சொல்ல முடியுமா?**

! 'உடோபியா'வில். சந்தேகமெழுந்தால் ஆங்கில அகராதியைப் பாருங்கள்.

*** எல். ஆர். சுந்தரராஜன், சென்னை — 28.**

**? ''ஜானகி ஆட்சிதான்: சூர்ப்பனகை ஆட்சி அல்ல' என்று வீரப்பன் கூறியுள்ளாரே?**

! ஜானகி — ராமச்சந்திரன் என்ற பெயர்ப் பொருத்தத்தை மட்டும் வைத்துக் கொண்டு ராமாயணத்தை இழுக்க வேண்டாம் என்றும் அப்புறம் தாங்கள் பேச ஆரம்பித்தால் பாதிக்கப்படுவது மறைந்த எம். ஜி. ஆர். தான் என்றும் அதற்கு நெடுஞ்செழியனை பதில் சொல்லியிருப்பதைப் பார்க்கவில்லையா? வீரப்பனுடைய பேச்சு அநாகரிக அரசியலுக்கு மிகச் சிறந்ததொரு எடுத்துக்காட்டு!

*** ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**பி. ரவிச்சந்திரன்,**
**123, ஏரிக் கரை சாலை,**
**(2—வது மாடி),**
**மேற்கு மாம்பலம், சென்னை — 600 033.**



• குற்றாலம்: ஆக்கிரமிப்புக் கடைகள் அகற்றப்பட்டன.



• முத்துலட்சுமி



• தங்கவேலு



• பிச்சைக்கனி

நெல்லை—கட்டபொம்மன் மாவட்டரீ—விசிட்:

# பொன் வைக்கும் இடத்தில் பூ கூட வைக்கவில்லை...

**கல்கி** (15.2.'87) இதழில் பிரசுரமான 'விளையாட்டுத் துறையையும் வீணாக்கும் அரசு' — என்ற கவர் ஸ்டோரி சம்பந்தப் பட்ட திருநெல்வேலி அண்ணா ஸ்டேடியத் திற்குச் சென்று பார்த்தோம். வழக்கம் போல், ஆடு, மாடுகள் தான் மேய்ந்து கொண்டிருந்தன.

அங்குள்ள ஹாஸ்டல் கேன்டீனில் 'இந்த விளையாட்டு மைதான வேலியை உடைத்துக் கொண்டு செல்பவர்கள் தண்டிக்கப்படுவார் கள்' — என்று எழுதி வைத்திருக்கிறார்கள் ஆனால், யாரும் அதை லட்சியம் செய்யா மல், விளையாட்டரங்கத்தைச் சுற்றியுள்ள கம்பி வேலியை வெட்டிக் கொண்டு, இன் னும் அதைக் குறுக்கு வழியாகத்தான் பயன் படுத்திக் கொண்டிருக்கிறார்கள் இன்னொரு அதிர்ச்சி தரும் செய்தி, ஸ்டேடியத்தை ஒட்டிப் பட்டப் பகலிலேயே கள்ளச் சாராய வியாபாரம் நடைபெறுகிறதாம். அதைக் குடிப்பதற்குச் செல்லும் சில குடிமக்கள் தான் இப்படி குறுக்கு வழியாகப் பயன்படுத் திக் கொண்டிருக்கிறார்களாம்!

ஹாஸ்டல் சாப்பாடு வழக்கம் போலவே சரியில்லையாம்! மாணவர்களுக்கு குளிப்ப தற்கும், குடிப்பதற்கும் ஒரே ஒரு தண்ணீர் தொட்டிதான்! சில வேளைகளில் ஸ்டேடியத் தினுள் புல் மேய்ந்து 'விக்கல்' எடுக்கும் கால்நடைகளும் அதில் தான் தண்ணீர் அருந்



* தனசிலன்: "மாவட்டப் பெயரைக் காப்பாற்றுவார்களா?"



* விளையாட்டுத் திடல்: ஒரு முன்னேற்றமும் இல்லை.



* கூளியூர் குடிநீர்த் தொட்டி: இருக்கப்பட்டு விட்டது.



* வாகதேவநல்லூர் பாலம்: அணுகு சாலை இல்லை.

துகின்றன! விளையாட்டு மைதானம் முழுக்க முள் செடிகள் மண்டிக் கிடக்கின்றன! " இந் நிலையில்தான் இவ்வாண்டு பிப்ரவரி மாதக் கடைசியில், இங்கு 'அகில இந்திய கிராமிய விளையாட்டு விழா' நடக்கவிருக்கிறது! இந்த கைய விளையாட்டு மைதானத்தின் (அவ)லட் சணத்தை அகில இந்திய விளையாட்டு வீரர் களும் அறிந்து கொள்ளுமுன், மாற்றியமைத் தால்தான், இந்த மைதானத்தின் பெயரை யும், மாவட்டத்தின் பெயரையும் காப்பாற்ற முடியும்!" என்றார் இந்த முறையும் நம்மை அழைத்துச் சென்று ஸ்டேடியத்தைச் சுற்றிக் காட்டிய தனசிலன்.

இத்தனைக்கும் இந்த விளையாட்டு மைதா னத்தைப் பராமரிக்க மூன்று வாட்ச்மென்கள் உள்ளனர். அவர்கள் கடமைக்குக் காலையி லும், மாலையிலும் வந்து விட்டு, வேறு வேலைக்குப் போய் விடுவார்களாம். பயிற்சி யளிக்க,போதிய அளவு கோச்சுகள்இல்லாத தும் பெரிய குறை. "இம் மாவட்ட விளை யாட்டு அதிகாரி தமது சொந்த ஊரான நாகர் கோவிலேயே தங்கியிருக்கிறார். எப் போதாவது தான் இந்தப் பக்கம் வருவார்" என்றார்கள் இந்த லட்சணத்தில் முன்பு கல்கி யில் செய்தி வெளிவந்ததும், பேட்டி கொடுத் தவர்களைக் கூப்பிட்டு மிரட்டினாராம். அந்த மிரட்டலின் எதிரொலியாகவே, ஸ்போர்ட்ஸ் ஹாஸ்டல் வார்டனுக்குக் கட்டாய இட மாற்றம் (நாகப்பட்டினத்திற்கு) செய்திருப்ப தாகச் சொன்னார்கள் இதைத் தவிர வேறு எந்த முன்னேற்றமும் நடைபெற்றதாகத் தெரியவில்லை.

அடுத்து, கல்கி (22.2.'87) இதழில் வெளிவந்த 'பச்சையாறு அணையை எதிர்க் கும் வனத்துறை' கட்டுரை சம்பந்தமாக — அந்த அணைக்கட்டிற்காக தனி ஒரு மனிதரா கத் தீவிரமாகச் செயல்பட்டும், பேசியும், துண்டுப் பிரசுரங்கள் வெளியிட்டும்... போராடி வரும் களக்காட்டைச் சேர்ந்த பிச்சைக் கனியைச் சந்தித்தோம். "வனத் துறையினர் இன்னமும் அணைகட்ட அனு மதி கொடுக்கவில்லை..." என்றார். எனினும் நாம் கேள்விப்பட்ட வரையில் நாம் எழுதிய கட்டுரையின் கட்டிங்குகளை வைத்துக் கொண்டு பெரிய பெரிய அதிகாரிகளெல் லாம் விவாதம் செய்ததாகத் தெரிகிறது. முடிவு? பொறுத்திருந்துதான் பார்க்க வேண் டும்.

•• மீண்டும் குற்றாலத்திற்கு ஒரு 'விசிட்' செய்தோம். மாலை நேரம் — அருவியில் கொட்டும் தண்ணீரின் திவலைகள் காற் றில் மிதந்து வந்து நம் உடலைத் தழுவும் போது... எப்போதும் போல் மனத்திற்கு இதமாகவே இருக்கின்றது! அருவிக்குப் போகும் பாதையிலுள்ள அதிகப்படியான



• புது கலெக்டர் பொன்னுசாமி: ரொம்ப பிஸி!

கடைகளை அகற்றி, ஒழுங்குபடுத்தியிருப்பதைக் கண்டு மகிழ்ச்சியாக இருந்தது.

•• குற்றாலத்திலிருந்து ஆறு கி. மீ. தொலைவிலுள்ள செங்கோட்டைக்குச் சென்றோம். சுமார் பத்து ஏக்கர் பரப்பளவுள்ள செங்கோட்டை மருத்துவமனை பற்றி அவ்வூரிலுள்ள தங்கவேலுவை மீண்டும் சந்தித்துக் கேட்டோம். அதற்கு அவர், ''ஒரு முன்னேற்றமுமில்லை... சார்! அதே தேக்க நிலைதான்! 'செங்கோட்டை மருத்துவமனையில் டாய்லெட் வசதி கூட இல்லாமலிருப்பது மிகவும் கொடுமையான விஷயமல்லவா...? கடந்த '57 — ல் காமராஜ் அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்ட, வாஞ்சி மெமோரியல் வார்டு இன்னும் ஏன் கட்டப்படவில்லை?' என்று கலெக்டர் பேட்டியில் கேட்டிருந்தீர்கள். அதற்குக் கலெக்டரும் 'கவனிக்கிறேன்...' என்றார். அவர் கவனிப்பதற்குள்... மாற்றலாகி விட்டார்!'' என்றார்.

நகர் மன்ற உறுப்பினர், திருமதி எஸ். முத்துலட்சுமி சோமு, ''உங்கள் செய்திக்குப் பின்னால் இங்குள்ள தண்ணீர்ப் பிரச்னையைச் சமாளித்திருக்கிறார்கள். மற்ற பிரச்னைகளுக்கும் நகர் மன்றக் கூட்டத்தில் தீர்மானங்கள் போட்டிருக்கிறோம்!'' என்றார்.

•• சபாநாயகர் பி. ஹெச். பாண்டியன் தொகுதியிலுள்ள கூனியூரில் கட்டி முடிக்கப்பட்ட குடிநீர்த் தொட்டியொன்று திறக்கப்படாமலிருந்ததை நாம் சுட்டிக்காட்டிய பிறகு, சபா நாயகரே நேரில் சென்று திறப்பு விழா செய்திருக்கிறார்...

•• திருநெல்வேலியிலிருந்து சுமார் நூறு கி. மீ. தொலைவிலுள்ள வாசுதேவநல்லூருக்குச் சென்றோம். அங்கிருந்து சுமார் ஆறு கி. மீ. தொலைவிலுள்ள மலையில் வாழும் மலைவாசிகளான பளியர் குடும்பங்களுக்கு 'வோட்டுரிமையில்லை; மருத்துவமனை வசதியில்லை' என்று கலெக்டர் பேட்டியில் கேட்டிருந்தோமே, அதற்கு உடனடியாக நடவடிக்கை மேற்கொண்டு, அவர்களுக்கு வோட்டுரிமை பெற்றுத் தந்ததோடு, ஆதி திராவிட நலத்துறை சார்பில் மாணவர்கள் இல்லம் ஒன்றையும் கட்டியிருக்கிறார்கள். ஆனால்... ''எங்களூரில் பேருந்து நிலையம் கிடையாது! ஊருக்கு நடுவிலுள்ள மந்தை வெளித் திடல், பொதுக் கழிப்பிடமாக மாறியுள்ளது. அதனால்... ஊர் முழுக்க ஒரே நாற்றம். அந்தத் திடலை நிரப்பி, பஸ் நிலையமும் கழிப்பிட வசதியும் செய்து கொடுத்தால்தான் எங்களூருக்கு விமோசனம் உண்டு! மேலும், 'கல்கி' இதழில் வெளியான எங்களூர் அரசினர் மேல்நிலைப் பள்ளி விளையாட்டு மைதானப் பிரச்னையும் இன்னும் தீரவில்லை; ஆக்கிரமிப்பு தொடர்கிறது. வாசுதேவநல்லூரிலிருந்து வெள்ளையானைக் கோட்டை (மத்திய மந்திரி அருணாசலம் ஊர்) செல்லும் சாலையில் சுமார் அறுபதாயிரம் ரூபாய் செலவில் கட்டப்பட்ட பாலத்திற்கும் இன்னும் அணுகு சாலை அமைக்கப்படவில்லை. தண்ணீர்ப் பிரச்னையை மட்டும்தான் ஓரளவுக்குச் சமாளித்திருக்கிறார்கள்...!'' என்றார்கள் அங்கு பொதுநல நோக்கில் இயங்கி வரும் நண்பர்கள் கழகத்தைச் சேர்ந்த காளிமுத்து, குருசாமி, மற்றும் ஆண்டாள் ராஜ் ஆகியோர்.

•• திருநெல்வேலி நகரைப் பொறுத்த வரையில், வழக்கம் போல் அசுத்தப்பட்ட நிலையில்தான் தாமிரபரணி ஆறு கவலையோடு ஓடிக் கொண்டிருக்கிறது. ரயில் நகர், மகாராஜா நகர் மக்கள் பிரச்னைகளும் தீர்க்கப்படவில்லை. கல்வெட்டாங்குழி இன்னும் மூடப்படாமல், பயமுறுத்திய வண்ணமே தான் காட்சியளிக்கிறது. பாதாளச் சாக்கடைத் திட்டமும் பாதியிலேயே கைவிடப்பட்ட நிலையில்தான் கிடக்கிறது. சுருக்கமாகச் சொன்னால் பொன் வைக்க வேண்டிய இடத்தில் சரியானபடி பூவைக் கூட யாரும் வைக்கவில்லை என்பதுதான் இந்த ரீ — விசிட்டில் நாம் கண்ட கொடுமை!

இந்நிலைக்கு என்ன காரணம்? தற்போதைய கலெக்டர் கே. பொன்னுசாமியைச் சந்தித்துக் கேட்கலாம் என்று அவரிடம் பேட்டிக்காகக் கடந்த ஒரு மாத காலமாக நேரம் கேட்டும் பயனில்லை. பல முறை அலைந்ததுதான் மிச்சம். சுற்றுப் பயண முடிவில் கலெக்டரைச் சந்தித்து விஷயங்களை எடுத்துரைப்போம் என்று வாசகர்களுக்கு நாம் கொடுத்த உறுதி மொழியைக் காப்பாற்ற இயலாமல் போனது குறித்து உண்மையிலேயே வருந்துகிறோம்.

— பானு மணாளன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
அலுவலகம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 4 3154 3, 4 34 157.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

